விரைவில்
வருகிறது

T.R.மஹாலிங்கம்
குமாரி ருக்மணி
T.R.ராமச்சந்திரன்
K.மஹாதேவன்
பேபி கமலா
கிருஷ்ணன்
மதுரம்

ப்ரகதி

# ஸ்ரீ வள்ளி




டைரக்ஷன்: AV.மெய்யப்பன் & A.T.கிருஷ்ணஸ்வாமி.

சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

# ரமோலா

என்னுடைய சருமமே எனக்கு முதல் கவர்ச்சி என்கிறார் ரமோலா. அவர் தவறாமல் லக்ஸ் டாய்லெட் சோப்பை உபயோகித்து தன் சருமத்தை அதிக சுத்தமாகவும், மிருதுவாகவும் வைத்துக்கொள்ளுகிறார். என் சரும அழகைக் காப்பாற்றிக் கொள்ள ஒருவான முறை இது தான் என்று கூறுகிறார். மேலும் இந்த சுத்த நறுமணமுள்ள சோப்பின் நுரை ஸ்திரீகளின் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், மாசின்மையுடனும் வைத்துக்கொள்கிறதென்று அவர் உறுதியாக நம்புகிறார்.




## லக்ஸ் டாய்லெட் ஸோப்




மலர் 4 }
இதழ் 34 }

1945 ஏப்ரல் 1

{ தாரண ஆ
{ பங்குனி 19



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

இந்தியாவிலும் அச்சு நாடுகளிலும் தவிர உலகத்தில் மற்ற எல்லா பாகங்களிலும் தற்சமயம் 'பிரிஸ்கோ, பிரிஸ்கோ' என்று ஸான்பிரான்ஸிஸ்கோ மகாநாட்டைக் குறித்து ஜபம் செய்து வருகின்றனர். அந்த மகாநாட்டில் கலந்துகொள்ளப் போகும் அந்தந்த தேசப் பிரதிநிதிகள் என்ன உடையைப் போட்டுக்கொண்டு போகலாம், என்ன விஷயங்களை விவாதிக்கலாம் என்று வெகு ஆவலாக யோசித்து வருகிறார்கள்; ஏற்பாடுகளும் செய்து வருகிறார்கள்.




ஆனால், நம் நாட்டில் மாத்திரம் அம் மகாநாட்டைக் குறித்து யாருக்கும் உற்சாகமே இருப்பதாகத் தெரியவில்லை. இந்தியாவின் பிரதிநிதிகள் என்று சர்க்காரால் வேஷம் போடப்பட்டு அனுப்பப்படும் பிரதிநிதிகளுக்குக்கூட அவ்வளவு உற்சாகம் இருப்பதாகத் தெரியவில்லை.

எப்படியாவது கொஞ்சம் உற்சாகத்தை உண்டாக்கலாம் என்ற உத்தேசத்துடன், மேற்படி ஸான்பிரான்ஸிஸ்கோவில் ஒரு வீதிக் காட்சியை இந்த இதழ் அட்டையில் வெளியிடுகிறோம்.

ஆஹா! எப்பேர்ப்பட்ட மாடமாளிகைகள்! வீதியில் வரிசை வரிசையாக நிற்கும் மோட்டார்களைத்தான் பாருங்கள்!

அப்படிப் பார்த்த பிறகும், உற்சாகம் வரவில்லையென்றால் இன்னும் சில விவரங்களைக் கேளுங்கள்:—அமெரிக்காவின் மேற்குக் கடற்கரையில் மிகப் பெரிய நகரமும், மிகப் பெரிய துறைமுகமும் இதுதான். மொத்தம் 45 தேசத்தைச் சேர்ந்த வெவ்வேறு நாட்டு மக்கள் இந்நகரில் வாழ்கிறார்களாம். க்கியமாக, இந்நகரில் சீனர்கள் ரொம்ப அதிகமாம். படத்தில் உள்ள நகர்ப் பகுதிகூட, னர்கள் வசிக்கும் இடந்தானாம்!

இன்னமும் உற்சாகம் உண்டாகவில்லையென்றால், நமது பாரதநாட்டு மகான் சுவாமி விவேகானந்தரை உற்சாகமாக வரவேற்று உபசரித்த நகரம் இது என்பதை நினைவு கூர்ந் ாவது, கொஞ்சம் கட்டாயம் உற்சாகப் படுங்கள்!



கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 34

# என்ன சேதி?

## பங்குனி உத்திரம்

இலங்கையிலிருந்து இமயமலை வரையில் பரவியுள்ள தமிழ் மக்களெல்லாம் ஒரு ஜாதி, ஒரு இனம் என்னும் ஒருமைப்பாடும் ஒற்றுமையுணர்ச்சியும் உண்டாவதற்குக் காரணமாயிருந்து வருகிறவர்கள் இரு பெரும் மகாகவிகள். ஒருவர் பாரதியார்; இன்னொருவர் கம்பர். இவ்விருவருடைய திருநாளையும் தமிழர் உள்ள இடங்களிலெல்லாம் கொண்டாடும் வழக்கம் சில காலமாய் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், பாரதியார் திருவிழா விஷயத்தில் அவருடைய பிறந்த நாளைக் கொண்டாடுவதா, இறந்த நாளைக் கொண்டாடுவதா என்ற தகராறினால் எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் விழா நடப்பதில்லை. கம்பர் விஷயத்திலோ, மேற்கண்ட விதமான தகராறுக்கு இடமில்லாமல் அவர் இராமாயணம் பாடி அரங்கேற்றிய பங்குனி உத்திரத் திருநாளில் விழாக் கொண்டாடுவதென்று ஏற்பட்டிருக்கிறது. இது காரணமாக, பங்குனிமாசம் பிறந்ததோ இல்லையோ நாலா பக்கங்களிலிருந்தும் கம்பர் விழா அழைப்பிதழ்கள் வந்து குவிந்து நம்மைத் திணற அடித்துவிடுகின்றன.

## தமிழ் நாட்டில்

கம்பர் பிறப்பதற்குக் கொடுத்து வைத்திருந்த தேரழுந்தூரில், சென்ற சில வருஷங்களாகச் சிறப்பாகக் கம்பர் விழா கொண்டாடப்பட்டு வருவது போல, இவ் வருஷமும் மார்ச் மாதம் 29-30 தேதிகளில் கொண்டாடப்பட்டதை யறிந்து மகிழ்கிறோம். இந்த மூலஸ்தானத் திருவிழாவில் தமிழ்ப் பேராசிரியர் திருவாளர் டி. பி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும், தமிழன்பர் ஸ்ரீ தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களும், கும்பகோணம் டாக்டர் மகாலிங்கய்யர், குற்றாலம் ஸ்ரீ சோமயாஜுலு முதலியோர்களும் ஈடுபட்டு நடத்தி வைத்திருக்கிறார்கள்.

ஏதேனும் ஒரு வருஷம் காரைக்குடியில் கம்பர் விழா நடைபெறவில்லையென்றால்தான் அதிசயமே யொழிய, இவ்வருஷமும் நடந்தது என்று சொல்லுவதில் வியப்பு ஒன்றும் இல்லை. அதிலும், ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் இவ்வருஷம் சிறைக்கு வெளியில் இருக்கும்போது கேட்கவேண்டுமா? 26-ம் தேதி முதல் 29-ம் தேதி வரை, காரைக்குடி தமிழன்பர்கள் நாலு நாள் கம்பரைக் கொண்டாடினார்கள். கம்பரைத் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடினார்கள் என்று சொன்னாலும் தவறில்லை. நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை, ராவ்சாஹிப் வையாபுரிப் பிள்ளை முதலிய பல கம்பனின் அன்பர்கள் காரைக்குடி விழாவில் ஈடுபட்டார்கள்.

## சென்னை நகரில்

சென்ற வருஷம் சென்னை நகரில் நடந்த கம்பர் திருவிழா, புயலும் இடியுமாக முடிந்த விஷயம் நேயர்களுக்கு நினைவு இருக்கலாம். அதற்காகச் சென்னைத் தமிழன்பர்கள் இந்த வருஷம் கம்பர் விழாக் கொண்டாடுவதை நிறுத்திவிடவில்லை. சென்ற வருஷத்தைக் காட்டிலும் விமரிசையாக மார்ச் 28-ம் தேதி முதல் ஏப்ரல் 1-ம் தேதி வரை விழாக் கொண்டாடப்படுகிறது. ஏப்ரல் 1-ம் தேதி சென்னை நகரின் இரண்டாவது கம்பர் மகாநாடு ஸ்ரீ திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் தலைமையில் நடைபெறுகிறது. கம்பர் சம்பந்தமான கலைக் கண்காட்சி யொன்றும் சிறப்பாக நடத்துகிறார்கள்.

# வீரருக்கு வரவேற்பு!

சொர்க்கம் விடுதலை யடைந்து வருகிறது!

சொர்க்க போகங்களை மீண்டும் அடைந்து அநுபவிக்கலாம் என்ற எண்ணத்தினால் தேவர்களின் நாக்கில் ஜலம் சொட்டுகிறது!

அவரவர்களும் சொர்க்கத்துக்குத் திரும்பிப் போகப் பிரயாணப்படும் நாளை உத்தேசித்து மூட்டை முடிச்சுகளைக் கட்டத் தொடங்கிவிட்டார்கள்!

"புறப்படுங்கள்!" என்று தந்தி எப்போது வரும் என்பதாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!

* * *

பழைய புராண காலத்துத் தேவர்களைப் பற்றியோ, அவர்களுடைய சொர்க்கத்தைப் பற்றியோ நாம் சொல்ல வரவில்லை.

இந்தக் காலத்து வெள்ளைத் தேவர்களையும் அவர்களுடைய சொர்க்கத்தைப் பற்றியுந்தான் சொல்கிறோம்.

பர்மா, மலாய் முதலிய நாடுகளை இந்தக் காலத்து ஆங்கிலோ—ஸாக்ஸன் தேவர்களின் 'சொர்க்கம்' என்று சொல்வது பிரசித்தம்.

மேற்படி பர்மா—மலாய் சொர்க்கத்தின் விடுதலைதான் இப்போது துரிதமாக நடைபெற்று வருகிறது.

ஆச்சு; சென்ற வாரத்தில் மாந்தலே நகரம் விடுதலையாகிவிட்டது!

அடுத்தாற்போல் ரங்கூனுக்குப் போய வேண்டியதுதான்: ரங்கூனைப் பிடித்து விட்டால், அப்புறம் சிங்கப்பூர்-பினாங்குக்குப் போக எத்தனை நாளாகும்? என்னதான் ஜப்பானியர் முரட்டுச் சண்டைக்காரர்களா யிருந்தாலும், ரங்கூனிலிருந்து சிங்கப்பூருக்குப் போக ஆறு மாதத்துக்குமேல் ஆகாது!

ஆகவே, சொர்க்கத்துக்கு ஜே! மூன்று வருஷத்துக்கு முன்னால் சொர்க்கத்தைக் காலி செய்துவிட்டு ஓடிப்போன தேவர்களுக்கு ஜே! அவர்கள் திரும்பச் சொர்க்கத்துக்கு வந்து சேரும் காலம் அதிக தூரத்தில் இல்லை!

முற்காலத்திலே தேவாசுரர்களுக்குள் அடிக்கடி யுத்தம் மூளுவதுண்டு. சில சமயம் தேவர்களின் கை தாழ்ந்திருப்பதும் அசுரர்கள் கை ஓங்கி யிருப்பதும் உண்டு. அம்மாதிரி சந்தர்ப்பங்களில், மனித லோகத்தைச் சேர்ந்த வீர புருஷர்கள் தேவர்களுடைய உதவிக்குச் சென்று அசுரர்களைத் தோற்கடித்ததாகப் புராணங்களில் படித்திருக்கிறோம். தேவாசுர யுத்தத்தில் அசுரர்களை வென்று சொர்க்கத்தை அசுரர்களிடமிருந்து கைப்பற்றித் தேவர்களிடம் ஒப்படைத்து விட்டு மனிதலோகத்துக்குத் திரும்பிவந்த வீரர்களாகிய தசரதன், தனஞ்செயன், துஷ்யந்தன், புரூரவஸ் முதலியோரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். அத்தகைய வீர பரம்பரையில் பிறந்த இந்தக் காலத்து இந்தியர்களும் அதேவிதமான சேவையை இந் நாளில் செய்கிறார்கள். பர்மா, மலாய் முதலிய சொர்க்க பூமிகளை அசுரர்களிடமிருந்து கைப்பற்றித் தேவர்களிடம் ஒப்படைக்க உதவி செய்து வருகிறார்கள். இப்பேர்ப்பட்ட உதவியில் நமது சென்னை மாகாணம் முன்னணியில் நின்று வருகிறது என்பதை யறிய நமக்குக் குதூகலம் உண்டாகிறது.

* * *

பர்மா யுத்தத்தில் நமது மதராஸி வீரர்கள் முன்னணியில் நிற்கிறார்கள் என்றும், அதைக் குறித்து நாம் குதூகலம் அடைகிறோம் என்றும் நாம் சொல்லும்போது, வேடிக்கையாகவோ வஞ்சப் புகழ்ச்சியாகவோ சூக்ஷ்ம அர்த்தத்துடனோ சொல்லவில்லை. பட்டவர்த்தனமான உண்மையைப் பட்டவர்த்தனமாகத் தெரிவிக்கிறோம்.

ஆம், நமது மதராஸி வீரர்கள் பர்மாப் போரில் முன்னணியிலேதான் இருந்து வருகிறார்கள். இதைக் குறித்து முன்னம் ஒரு தடவை சென்னைக் கவர்னர் அத்தாட்சி தந்திருக்கிறார். சென்ற வாரத்தில், மீண்டும் யுத்தகளத்திலிருந்து மதராஸி பயனியர் படை வீரர்களையும் அவர்களுடைய திறமையையும் புகழ்ந்து பாராட்டிச் செய்தி வந்திருக்கிறது.

யுத்தத்தில் பெரும்படை முன்னேறுவதற்கு முன்னால், பாதையைச் செப்பனிட்டுக் கொண்டு முன்னால் போகும் சைன்யப் பகுதிக்கு 'பயனியர்கள்' என்றும் 'சாப்பர்ஸ் அண்ட் மைனர்ஸ்' என்றும் பெயர் வழங்குகிறது. அசல் சைன்யத்தில் உள்ள வீரர்களைக் காட்டிலும் பாதை செப்பனிடும் இந்த முன்னணிப் படை வீரர்களுக்கு அதிகத் திறமையும் சாமர்த்தியமும் துணிச்சலும் வீரமும் வேண்டும். அவர்களுக்கு இஞ்சினீரிங் வேலையும் ரேடியோ வேலையும் தச்சு கொல்லு முதலிய பல வேலைகளும் தெரிந்திருக்க வேண்டும். இவ்வளவுடன், துப்பாக்கியை உபயோகப்படுத்தவும் தெரிந்திருக்க வேண்டும். திடீரென்று வந்து தாக்கும் எதிரிகளை எதிர்த்துச் சமாளிக்கும் சாகசமும் வேண்டும். இப்பேர்ப்பட்ட திறமையும் வீர சாகசமும் தேவையான முன்னணிப் படைகளில், நமது மதராசி வீரர்கள் புகழ் பெற்று விளங்குகிறார்கள் என்பது சென்னை மாகாணத்துக்குக் கௌரவமளிக்கும் விஷயமே யாகும்.

* * *

இதுமட்டு மல்ல. சில காலமாகச் சென்னை மாகாணத்துக்கு இருந்துவந்த ஒரு அவப்பெயரானது இந்த யுத்தத்தின்போது நீங்கிவிட்டிருக்கிறது.

இந்திய மாகாணங்களைப் 'போர்க் குணம் படைத்த மாகாணங்கள்' என்றும், 'போர்க் குணம் இல்லாத மாகாணங்கள்' என்றும் பிரித்திருந்தார்கள். ராஜபுதனம், பஞ்சாப் முதலிய மாகாணங்களிலேதான் யுத்தத்துக்கு லாயக்கான வீரர்கள் உண்டு என்று சொல்லப்பட்டு வந்தது. வங்காளம், சென்னை முதலிய மாகாணங்களில் உள்ள ஜனங்கள் போர்த் தொழிலுக்குத் தகுதியற்றவர்கள் என்று கருதப்பட்டார்கள்.

மேற்படி நிலைமை சென்ற ஐந்து வருஷத்தில் அடியோடு மாறிவிட்டது. இந்திய சைன்யத்தில் மதராஸிகளின் எண்ணிக்கை நம்பவும் முடியாதபடி உயர்ந்துவிட்டது!

சென்ற 1944-ம் வருஷம் ஜூலை மாதத்தில் இந்தியச் சைன்யத்தில் மொத்தம் சுமார் 17 லட்சம் வீரர்கள் இருந்தார்கள். அதற்குப் பின்வரும் மாகாணவாரிக் கணக்கைப் பாருங்கள்:

| | |
|---|---|
| பஞ்சாப் | 5,65 000 |
| சென்னை | 3,42,000 |
| ஐக்கிய மாகாணம் | 2,28,000 |
| பம்பாய் | 1,01,000 |
| வங்காளம் | 1,00,000 |

இவ்வாறு, இந்தியாவில் பஞ்சாபுக்கு அடுத்தபடியாகச் சென்னை மாகாணத்திலேதான் வீரமும் வீரர்களும் அதிகமென்று இந்த யுத்தத்தின் காரணமாய் ஏற்பட்டு விட்டது. மேலே கொடுத்திருப்பது சென்ற 1944-ம் வருஷம் ஜூலை மாதக் கணக்கு. சென்ற ஒன்பது மாதத்தில் சென்னை வீரர்களின் தொகை இன்னும் பெருகித் தற்சமயம் இந்திய சைன்யத்தின் எல்லாப் பிரிவுகளிலுமாகச் சுமார் நாலரை லட்சம் மதராஸி வீரர்கள் இருந்து வருகிறார்கள்.

* * *

மாண்டலே பிடிபட்டு விட்டதையும், வைஸிராய் லேவல் சீமைக்குப் போயிருப்பதையும், ஐரோப்பாவில் யுத்தம் முடிவடையப் போவதையும், அதையும் இதையும் சேர்த்துப் பார்க்கும்போது ஜப்பானிய யுத்தம் வெகு சீக்கிரத்தில் இன்னும் கடுமையாகுமென்று எதிர்பார்க்கலாம். ஆறு மாசத்திலோ, ஒரு வருஷத்திலோ, அல்லது ஒன்றரை வருஷத்தில்தானோ, ஜப்பான் யுத்தம் முடிவடையும்போது மேற்படி நாலரை லட்சம் மதராஸி வீரர்களும் அவரவர்களுடைய சொந்த ஊருக்குத் திரும்பி வருவார்கள். அவர்களை நாம் எப்படி வரவேற்கப் போகிறோம்? அவர்களுக்கு எத்தகைய வரவேற்பு அளிப்பது? அவர்களுடைய விஷயத்தில் சென்னை மாகாணப் பொது ஜனங்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

உயிருக்குத் துணிந்து போர் முனைக்குச் சென்று திரும்பிய வீரர்கள் என்று அவர்களைப் பாராட்டி வரவேற்கப் போகிறோமா, அல்லது தீர்க்க யோசனையே இல்லாத குறுகிய புத்தியுடைய சில அரசியல் பிரமுகர்கள் சொல்வதைப் போல், 'வயிற்றுச் சோற்று வீரர்கள்' என்றோ, 'அரிசிப் பட்டாளம்' என்றோ சொல்லி, அவர்களையும் அவமதித்து நம்மையும் அவமானப் படுத்திக் கொள்ளப் போகிறோமா?

சைன்யத்தில் சேர்ந்து போர்முனைக்குச் சென்றிருக்கும் நமது வீர சகோதரர்களை 'வயிற்றுச் சோற்றுக்காகப் பட்டாளத்தில் சேர்ந்தவர்கள்' என்று சொல்வது அநீதி, அத்துடன் பெரும் மடமை என்று நாம் கருதுகிறோம்.

முதலாவது, வயிற்றுப் பாட்டுக்காக யாதொரு தொழிலிலும் ஈடுபடுவதில் எவ்வித இழிவோ, அகௌரவமோ இடையாது.

இந்தியாவின் நாற்பது கோடி மக்களையும் எடுத்துக் கொண்டு பார்ப்போ

மானால், மகாத்மா காந்தியையும், ரமண ரிஷியையும் போன்ற ஒரு சில மகான் களைத் தவிர மற்ற 39 கோடியே 99 லட்சத்துச் சொச்சம் பேர் வயிற்றுப் பாட்டுக்காகத் தொழில் செய்கிறவர் களாகவே இருப்பார்கள்.

மாதம் ஆயிரம், இரண்டாயிரம் சம் பளம் வாங்கும் ஐ. ஸி. எஸ். உத்தி யோகஸ்தர்கள், ஐயாயிரம் வாங்கும் நீதிபதிகள், டிபுடி கலெக்டர்கள், தாசில் தார்கள், என்ஜினியர்கள், போலீஸ் அதி காரிகள் எல்லாரும் வயிற்றுப்பாட்டுக் காகத்தான் சர்க்கார் சேவகம் செய் கிறார்கள். பெரிய பெரிய வக்கீல்கள், டாக்டர்கள், ஆலை முதலாளிகள், வியா பாரிகள், ஆலைத் தொழிலாளிகள், குமாஸ்தாக்கள், ஆசிரியர்கள் (ஏன், பத்திரிகாசிரியர்கள் கூடத்தான்!) இப் படிச் சகலமான பேரும் வயிற்றுப் பாட்டுக்காகத்தான் பாடுபடுகிறார்கள். இன்னும் பொதுஜன சேவைக்காகவே தங்கள் வாழ்நாளை அர்ப்பணம் செய் திருக்கும் சட்டசபை அங்கத்தினர்க ளாகிய ஜனப் பிரதிநிதிகளுக்குக்கூட வயிற்றுப் பாட்டைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. பல மாகாண சட்டசபை அங்கத்தினர்கள் மாதச் சம்பளம் வாங்கிக் கொண்டார்கள். இந்திய சட்ட சபை அங்கத்தினர்கள் தினம் ஒன்றுக்கு வயிற்றுப் பாட்டுக்காக ரூ. 25/- படி வாங்கிக் கொள்கிறார்கள்.

இப்படி இருக்கும்போது, பட்டா ளத்தில் சேருகிறவர்களை மட்டும் 'வயிற்றுச் சோற்று வீரர்' என்று சொல்லி ஏன் அவமதிக்க வேண்டும்?

ஒரு வித்தியாசம் இருக்கிறது. வயிற் றுப் பாட்டுக்காக வேறு சாதாரண தொழில்களில் ஈடுபடுகிறவர்கள் பத்திரமான இடத்திலிருந்து பத்திர மான வேலை செய்கிறார்கள்.

பட்டாளத்தில் சேருகிறவர்களோ, உயிருக்குத் துணிந்து சேருகிறார்கள்.

இவற்றில் எது விசேஷமானது?

பட்டாளத்தில் சேருகிறவர்கள் என்ன நோக்கத்துடன் எதற்காகச் சேர்ந் தாலும், அப்படிச் சேர்வதற்கு நெஞ்சில் ஒரு துணிச்சல் வேண்டும். உயிரைப் பொருட்படுத்தாத தீரம் வேண்டும்.

மேற்படி தீரம், துணிச்சல் எல்லாம் சுதந்திர இந்தியாவின் சுதந்திர சைன்யத்துக் குரியனவாயிருந்தால், நன்றாய்த்தானிருக்கும். நம்முடைய சந்தோஷமும் பாராட்டுதலும் பன் மடங்கு அதிகமாய்த்தானிருக்கும்.

ஆனால், இந்தியா சுதந்திர மடை யாததின் பொறுப்பை அவர்கள் தலை யிலே மட்டும் போடுவதில் பிரயோஜன மில்லை. அதற்கு இந்தியாவின் நாற்பது கோடி ஜனங்களும் பொறுப்பான வர்கள். இந்தியாவின் தேசியத் தலை வர்கள் முக்கியமான பொறுப்பாளிகள்.

எனவே, இந்தியா சுதந்திரம் பெறாத தற்காக, இந்திய சைன்யத்தைச் சேர்ந் தவர்களைத் துவேஷிப்பதோ, அவமதிப் பதோ பெரும் அநியாயமாகும்.

* * *

நீதி, அநீதி என்பதெல்லாம் ஒரு புறமிருக்க, பட்டாளத்தைச் சேர்ந்த வீரர்கள் திரும்பி வரும்போது அவர் களை ஆதரவோடு நாம் வரவேற்க வேண்டும் என்பதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன:—

1. இந்தக் காலத்துச் சைன்யத்தில் சேர்ந்த வீரர்களுக்கு ஆயுதப் பயிற்சி யைத் தவிர வேறு பலவிதமான பயிற்சிகள் கொடுக்கப் படுகின்றன. காட்டை அழித்து அதி சீக்கிரத்தில் பாதை செப்பனிடவும், நதிகளுக்கு மிக விரைவில் பாலம் போடவும், பலவித இயந்திரங்களை இயக்கவும், ரேடியோக் கருவிகளை நிலைநாட்டி உபயோகிக்க வும் கற்றுக் கொடுக்கிறார்கள். இன் னும், புதிய முறையில் திறமையாக விவசாயம் செய்யும் பயிற்சி கூட அளிக்கிறார்கள்.

இந்தப் பயிற்சிகளெல்லாம் அவர் களுக்கு இந்தியப் பொது மக்களின் பணத்தைக் கொண்டுதான் அளிக்கப் படுகிறது.

அப்படிப் பயிற்சி பெற்றவர்களை நமது தேசப் புனர்நிர்மாணத்துக் குரிய பல துறைகளிலும் ஈடுபடுத்தி வேலை வாங்கிக் கொள்ள நமக்குப் பாத்தி யதை உண்டு. அந்தப் பாத்தியதையை வேண்டாமென்று இழப்பது தேசத் துக்குப் பெரும் நஷ்டமாகும்.

2. பட்டாளத்திலிருந்து திரும்புகிற வர்கள், வெவ்வேறு நாடுகளைப் பார்த் துப் புதிய புதிய அநுபவங்களை அடைந்தவர்களாய், அறிவும் நோக்க மும் விசாலித்தவர்களாய், தாய்நாட்டின் சுதந்திரத்தில் பற்றுடையவர்களாய்த் திரும்பி வருவார்கள். இந்தியாவின் விடுதலையில் அவர்களுக்குள்ள ஆர்வம் இங்கேயே உள்ளவர்களுக்கு இராது என்றுகூடச் சொல்லலாம்.

அப்படிச் சுதந்திர ஆர்வங் கொண்ட வர்களை நாம் அன்புடன் வரவேற்றே

மானுல், தேச விடுதலை முயற்சிக்குப் பெரிதும் அவர்களால் பலம் உண்டாகும். அவர்களை அவமதித்து அலட்சியமாய் நடத்தினோமானுல், நிச்சயமாய் தேச விரோதிகளுக்குத்தான் அதனுல் அனுகூலம் ஏற்படும். சுதந்திர எதிரிகளின் கட்சிக்கு அவர்களை நாமே தள்ளி விட்டதாகும்.

* * *

மேலே கூறியது எல்லாவற்றையும் விட மிக முக்கியமான அரசியல் காரணம் ஒன்று இருக்கிறது. அதற்காகவேனும் இந்திய சேனு வீரர்களை நாம் கௌரவிக்க வேண்டும்.

கொஞ்ச நாளைக்கு முன்பு. அமெரிக்காவில் இந்தியர்கள் வந்து குடியேறும் உரிமையும், குடியேறியவர்களுக்குச் சம பிரஜா உரிமையும் வழங்குவது பற்றி ஒரு கமிட்டி விசாரணை நடத்தியது. அவ்விதம் இந்தியர்களுக்குச் சம உரிமை வழங்குவதைப் பரிபூரணமாக ஆதரித்து பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் ஒரு செய்தி அனுப்பினுர். அதில் அவர் என்ன சொன்னுர் தெரியுமா?

"இந்த யுத்தத்தில் இந்தியா நேசக் கட்சிக்கு மகத்தான உதவி செய்திருக்கிறது. இந்திய வீரர்கள் எல்லாப் போர் முனைகளிலும் மிகத் தீரத்துடன் போர் புரிந்து வருகிருர்கள். அப்படியிருக்கும்போது, இந்தியருக்கு அமெரிக்காவில் கட்டாயம் சம உரிமை கொடுத்தே யாக வேண்டும்" என்ருர் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்.

அவருடைய யோசனைக் கமிட்டியார் அவ்வளவு சுலபமாக ஒத்துக்கொண்டு விடவில்லை. மசோதாவைத் தள்ளிப் போட்டிருக்கிருர்கள்.

ஆனுல், அதற்காக இப்போது நாம் கவலைப்பட வேண்டியதில்லை. யுத்தத்தில் இந்தியாவின் பேருதவியைப் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் பகிரங்கமாக ஒத்துக்கொண்டிருக்கிருர் என்பதுதான் முக்கிய விஷயம்.

இது விஷயத்தில் ரூஸ்வெல்ட்டின் கூற்றை நாம் ஆதரிக்கப் போகிருேமா? அல்லது மறுக்கப் போகிருேமா?

"இல்லை; இல்லை! இந்தியா மனதார இந்த யுத்தத்தில் உதவி செய்யவில்லை. சைன்யத்தில் சேர்ந்திருக்கும் இந்தியர்கள் வயிற்றுச் சோற்றுப் பட்டாளங்கள்!" என்று பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டுக்கு நாம் பதில் சொல்லப் போகிருேமா?

* * *

யுத்தம் முடியப்போகும் இந்தச் சமயத்தில் இந்தியா யுத்தத்தில் செய்திருக்கும் உதவிகளையே நாம் வற்புறுத்திச் சொல்லவேண்டும். "அதற்கெல்லாம் பிரதி பலன் என்ன?" என்று கேட்க வேண்டும்.

இந்தியப் படைகளின் உதவியைக் கொண்டு, இந்திய சாமக்ரியைகளைக் கொண்டு மீட்கப்படும் பர்மா தேசத்தில், இந்தியர்களுக்கு விசேஷ உரிமைகள் அளிக்க வேண்டுமென்று நாம் வற்புறுத்த வேண்டும்.

அதே மாதிரி மலாய் நாடு விஷயத்திலும் கேட்க வேண்டும்.

இந்தியாவைக் கேட்காமல், இந்தியாவின் சம்மதம் பெருமல், பர்மா—மலாய் நாடுகளின் வருங்கால அரசியலை நிர்ணயிக்கக் கூடாது என்று வற்புறுத்த வேண்டும்.

இதுதான் இராஜ தந்திரம்; இதுதான் அரசியல் முறை; இதுதான் தேச நன்மைக்கு உகந்தது.

இதற்கு மாருக, போர்முனைக்குச் சென்ற நமது வீரர்களை நாமே அவமதித்துப் பேசுவது, யுத்தத்தில் இந்தியா செய்துள்ள உதவியைக் குறைத்துச் சொல்வது, இவையெல்லாம் உலக சரித்திரத்திலேயே கேட்டிராத இராஜ தந்திர மடமையாகும்.

## நாமக்கல் கவிஞர் நிதி

★ தமிழர்கள் தமிழ் மகா கவி கம்பரின் திருநாளைக் கோலாகலமாகக் கொண்டாடும் இந்த வாரத்தில், நாமக்கல் கவிஞர் நிதியை மறந்துவிட வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிருேம். நாளது ஏப்ரல் 15-ம் தேதியன்று கவிஞருக்கு நிதி முடிப்பு அளிப்பதென்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. சரியாக இன்னும் இரண்டு வாரங்கள்தான் பாக்கி. புதிய தமிழ் வருஷம் பிறந்ததும், ஒரு புனிதமான காரியத்தில் கலந்துகொள்ளவேண்டும் என்ற ஆசையுள்ள தமிழன்பர்கள் இந்தச் சந்தர்ப்பத்தைக் கைவிடக் கூடாதென்று தெரிவித்துக் கொள்ளுகிருேம். அவரவர்களுடைய நன்கொடையை உடனே அனுப்பி வைக்க வேண்டும்.

# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## புது வருடக் கச்சேரிகள் 1945-46.

★

ஏப்ரல் 8உ லக்ஷ்மி கௌரி சகோதரிகள்

ஏப்ரல் 22உ தஞ்சாவூர் பரதநாட்டியப் பெண்மணிகள் அறுவர் நடிக்கும் சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்

மே 6உ கானகலாதர மதுரை ஸ்ரீ மணி ஐயர் & பார்ட்டி.

மே 20உ ஸ்ரீ பி. என். வேதாசலஞ் செட்டியார் & பார்ட்டி.

ஜூன் 3உ ஸ்ரீமதி என். ஸி. வசந்த கோகிலம் & பார்ட்டி.

ஜூன் 17உ ஸ்ரீ டி. எம். தியாகராஜன் & பார்ட்டி. (செம்மங்குடியின் சீடர்)

குறிப்பு:—சங்கீத கலாநிதி ஸ்ரீ. கே. பொன்னையா பிள்ளை அவர்களின் பார்வையின் கீழ் புராதனமான முறையில் நடந்து வரும் குறவஞ்சி நாடகத்தைக் காண அன்பர்களுக்கு இது ஒரு அரிய சந்தர்ப்பம்.

★

### ஆதரவாளர் 1945 - 46.

ஓராண்டிற்கு:

முதல் வகுப்பு ரூ. 20/-

இரண்டாம் வகுப்பு ரூ. 10/-

ஆதரவாளர்களின் வேண்டுகோளின் பேரில், ஒரு சில ஆதரவாளர்களையே கீழ்க் கண்டுள்ளவாறு மாதாந்திர ஆதரவாளர்களாகச் சேர்த்துக் கொள்ளுகிறோம்.

பிரவேசக் கட்டணம் ரூபா ஒன்றுடன்

மாதத்திற்கு

முதல் வகுப்பு ரூ. 2.

இரண்டாம் வகுப்பு ரூ. 1.

★

ராவ் சாகிப்,

டி. என். கர்ராபிகேச முதலியார், பி. ஏ.

கௌரவ காரியதரிசி.

---

ஜீவிய சரித்திரத்தில் ஒரு புதுமை




ஒரு நாட்டின் சரித்திரம் அந்த நாட்டுப் பெரியவர்களின் சரித்திரங்களோடு சேர்ந்தே விளங்குவது. தமிழ் நாட்டின் சரித்திரம் பூரணமாக வேண்டுமானால் இந்த நாட்டில் விளங்கிய பெரியோர்களின் சரித்திரமும் தெளிவாக வர வேண்டும்.

"அரசியல் வாதி, தர்மசீலர், அரசாங்க நிர்வாகத்தை நடத்தியவர், தேச பக்தர், கல்வி முன்னேற்றத்துக்கு உழைத்தவர், பொதுஜன நன்மையே நோக்கமாகக் கொண்டவர்" என்று பல பல துறைகளிலும் புகழ் பெற்ற ஒருவருடைய சரித்திரத்தை உணர்ந்தால் தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் ஒரு பகுதியையே உணர்ந்துவிடலாம்.

ஸ்ரீ கி. சந்திரசேகரன் எழுதிய வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் சரித்திரத்திற்கு முகவுரை எழுதிய திருவாங்கூர் திவான் ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர், "வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய ஜீவிய சரித்திரம் இந்திய சரித்திரத்தில், முக்கியமாகத் தென்னிந்திய சரித்திரத்தின் ஒரு துண்டு என்று சொல்லலாம். இதுவரையில் வெளிவராத பல புதிய நிகழ்ச்சிகள் இப் புஸ்தகத்தில் உள்ளன" என்று சொல்லுகிறார்.

நீங்கள் அதைப் படித்து அந்தப் புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?

பக்கம் 600 விலை ரூ. 8/- 20 படங்கள்

மானேஜர்-கலைமகள்-மயிலாப்பூர்.

# வெய்யில் ரொம்பக் கடுமை









-உம்மன்


அமெரிக்காவிலும் அப்படித்தானா?


அமெரிக்காவில்
வெய்யில்


ருஷியாவோ கேட்க வேண்டியதில்லை
இந்தியாவின்


என்னதான் செய்யலாம்?


"இந்தியப் பிரச்னையைப் போட்டிருந்த ஐஸ் பெட்டியைத் திறக்க வேண்டியதுதான்!"


உயர்தர
பிரிட்டிஷ்
பிரிஜடர்
அடக்கம்:
இந்தியப்
பிரச்னை

### கல்கத்தாவில்

கல்கத்தாவில் பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், மார்ச் 19-ந் தேதியிலிருந்து 29-ந் தேதி வரை பத்து தினங்கள் கவிராஜ பண்டித கலகராஜ ஐயர் அவர்களால கம்ப ராமாயண உபந்நியாசம் நடந்து, 29-ந் தேதி கம்பர் திருநாளன்று இராம பட்டாபிஷேகத்துடன் முடிவடைந்தது என்று அறிகிறோம்.



பி. ஸ்ரீ.

### பம்பாயிலுந்தான்

வட நாட்டில் தமிழன்பு கொழுந்துவிட்டு வளர்ந்திருக்கும் இடங்களிலே பம்பாயை முதன்மையாகக் குறிப்பிட வேண்டும். சமீபத்தில் பம்பாயில் ஸ்தாபிதமாயிருக்கும் தமிழ்ச் சங்கத்தார் பாரதியார் நிதி வசூல் விஷயத்தில் எல்லாருக்கும் வழி காட்டிகளாய் இருந்திருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் கம்பன் விழாவைக் கொண்டாடாமல் விடுவார்களா? தமிழ்நாட்டிலிருந்து யாராவது ஒரு தமிழ்ப் பிரமுகரைத் தருவித்து விழா நடத்தவேண்டும் என்ற காரணத்தினால் சிறிது தள்ளி ஏப்ரல் 14, 15, 16-ம் தேதிகளில் பம்பாய்ச் சங்கத்தார் கம்பர் விழாக் கொண்டாடுகிறார்கள்.

### பி. ஸ்ரீ. வருகிறார்

மேற்படி விழாவுக்காகத் தமிழ் நாட்டிலிருந்து நண்பர் பி. ஸ்ரீ. அவர்கள் பம்பாய்க்கு அழைக்கப் பட்டுப் போகிறார் என்பதை அறிந்து மிகவும் மகிழ்கிறோம். தமிழ் நாட்டில் இன்றைய தினம் கம்பன் கவிதையைப் பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்கள் ரசித்து அநுபவிப்பதற்குக் காரணமாயிருக்கும் பிரமுகர்கள் சிலரில் நண்பர் பி. ஸ்ரீ. அவர்களும் ஒருவர். கம்பனுடைய ஒப்பற்ற கவிப் பண்பை பி. ஸ்ரீ. அவர்கள் சென்ற இருபது வருஷ காலமாக எழுத்தின் மூலமாகவும், பேச்சின் மூலமாகவும் தமிழ் நாட்டில் பரப்பி வந்திருக்கிறார்.

### ஜால வித்தையும்.........

பி. ஸ்ரீ. அவர்கள் கம்பன் கவிதையைச் சொல்லும் முறையைப் பற்றி ஒரு சமயம் டி. கே. சி. அவர்கள் கூறிய அருமையான உபமானத்தை இங்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்: ஒரு மந்திரவாதி கையில் ஒரு தாமரைப் பூவை வைத்துக் கொண்டான். அதற்குள்ளேயிருந்து லட்டுகள், மிட்டாய்கள், பொம்மைகள், கரப்பான் பூச்சிகள், களிமண் உருண்டைகள், கோழி முட்டைகள் இவ்வளவையும் எடுத்தெடுத்துப் போட்டு, "எப்படி என் ஜாலவித்தைத் திறமை! தாமரைப் பூவிலிருந்து என்னவெல்லாம் கொண்டு வந்தேன், பார்த்தீர்களா?" என்றான். பார்த்தவர்களில் பலர் கைகொட்டிச் சந்தோஷப்பட்டார்கள்.

### சிருஷ்டி விந்தையும்

ஆனால், விஞ்ஞானி யொருவன்: தாவர சாஸ்திரம் பயின்றவன்:—அவனும் அதே தாமரைப்பூவை எடுத்துக் கொண்டான். பூவின் இதழ்கள் அமைந்திருக்கும் அழகையும், இதழ்களில் ஓடும் ரேகைகளின் அற்புதத்தையும், மொட்டு விரிந்து மலராகும் அதிசயத்தையும், அதிலிருந்து வாசனை கமழும் விந்தையையும், அந்த வாசனையினால் கவரப்பட்டு வண்டுகளும் தேனீக்களும் ஓடி வரும் ஆச்சரியத்தையும், மலரின் மத்தியிலுள்ள மகரந்தப் பொடியை அவை கொண்டு போய் வேறு பூக்களில் தூவ, அதனால் விதை உண்டாகிப் புதிய செடிகள் உற்பத்தியாகும் அற்புத சிருஷ்டி விந்தையையும் எடுத்துச் சொன்னான். மந்திரவாதியின் ஜால வித்தையைப் பார்த்திருந்த சிலருக்கு விஞ்ஞானியின் பேச்சு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனால் அங்கிருந்த அறிவாளிகளோ ஒரே வியப்பில் மூழ்கிப் போனார்கள்.

நண்பர் பி. ஸ்ரீ. கம்பனைச் சொல்லும் முறை மந்திரவாதியின் முறையல்ல; விஞ்ஞானியின் முறை. கம்பன் கவிகளிலிருந்து இல்லாத பொருள்களை வெளிக் கொணர்ந்து, "பார்த்தீர்களா?" என்று அவர் கேட்பதில்லை. தாவர சாஸ்திரியைப் போல் மலரின் அழகையும் அதன் அமைப்பு விசித்திரத்தையும் எடுத்துக் காட்டி அதிசயத்தில் மூழ்க வைக்கிறார்.

மேற்கண்டவாறு தமிழ் நாட்டின் தலை சிறந்த தமிழறிஞரால் பாராட்டப் பெற்ற பி. ஸ்ரீ. அவர்கள் பம்பாய்க்கு வருவது பம்பாய்த் தமிழர்களின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். அவருடைய விஜயத்தை பம்பாய்த் தமிழன்பர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்வார்களென்று நம்புகிறோம்.

# கிரிக்கட் காட்சிகள்





சென்னை கிரிக்கட் விழாவின் வெற்றிக்குப் பெரிதும் காரணமான ஸ்ரீ கே. எஸ். ரங்காரான். கிரிக்கட் நிர்வாக சபையின் காரியதரிசி.

ரங்காச்சாரி பந்தை எறிய வந்து விட்டார். இருபது அடி தூரம் ஓடி வந்தாகி விட்டது. கையிலுள்ள பந்து ராம பாணம் போல் புறப்படுவதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறது. விக்கட்டில் இருக்கும் ஆட்டக்காரரின் கால்கள் துடிக்கின்றன. விளையாட்டைப் பார்க்கும் ஆயிரக் கணக்கானவர்களின் மனமும் பரபரப்பினால் துடிக்கிறது.



சென்னையில் கிரிக்கட் விழா முடிந்து பல நாட்களாகின்றன. எனினும், மாணவர்கள் தெருவில் நடக்கும் போதும், வகுப்பு அறையிலும் கூட, அமர்நாத் பந்தை ஓங்கி அடிப்பது போல் தாங்களும் செய்து பார்த்து மகிழ்கிறார்கள். அதே மாதிரி உபாத்தியாயர்களும் அமர்நாத் பந்தை ஆடும் தோரணையைப் பின்பற்றித் தாங்களும் பிரம்பைச் சுழற்றுவதென்று அபிப்பிராயப்படுகிறார்கள்!



-சாமா



இவர்தான் கண்டிராக்டர்: ஆனால் ராணுவ கண்டிராக்டரல்ல. இலங்கைக்குச் சென்றிருக்கும் கிரிக்கெட் கோஷ்டியின் வரவு செலவுகளைக் கவனித்துக் கொள்வதற்காக அனுப்பப்பட்டிருக்கும் ஸ்ரீ எச். என். கண்டிராக்டர் என்னும் பார்ஸிக்காரர்.



இது, ஏதோ புது மாதிரி நாட்டியம் என்று நினைக்க வேண்டாம். சென்னை கிரிக்கெட் அபிமானிகளின் அபிமானத்துக்குப் பாத்திரமான எம். ஜே. கோபாலன், பந்தை விளாசி அடித்த குஷியில் நிற்கிறார்.





ஹைதராபாத்தின் இளம் ஆட்டக்காரரான குலாம் அஹமத், தமக்கும், தமது ஊரான ஹைதராபாத்துக்கும், தாம் ஆடிய சென்னைக் கோஷ்டிக்கும் புகழ் தேடிக் கொடுப்பதற்காகவே செய்ததுபோல், ஒரே ஆட்டத்தில் மூன்று அகில இந்திய ஆட்டக்காரர்களைச் சேர்த்தாற் போல் வெளியேற்றினார்!



யானை வருவதற்கு முன்னால் ஒருவேளை மணியோசை வராமல் இருக்கலாம். ஆனால், கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் விளையாட வருவதற்கு முன்னால், முதலில் அம்பயர்கள் வந்துதான் ஆக வேண்டும். படத்தில் இருப்பவர்தான் அம்பயர் ஓ'காலகன்.

# ஆகாச வெடி

"புர்ராபஜார் பிரதேசத்தில் ரூ. 25,000 பெறுமான மூன்று 'பெட்ஷீட்'களைப் பதுக்கி வைத்திருந்த ஒரு வியாபாரி கைது செய்யப்பட்டார்." —ஒரு செய்தி.

இவ்வளவு பெட்ஷீட்டுகளைப் பதுக்கி வைத்திருந்த போதிலும் மேற்படி வியாபாரிக்கு கிம்மதியான தூக்கம் இருந்திருக்கா தென்றே நம்புகிறோம்.

★

"அர்மோவடி என்ற ஊரில் ஒரு கர்த்தவனத்துக்கு மாதத்தில் ஆறு தடவை ஒரு காக்கை வந்து 'சுயராஜ், சுயராஜ்' என்று தெளிவாகக் கத்திவிட்டுப் போகிறதாம்."

—ஒரு செய்தி.

இனிமேல், மனிதர்கள் சுயராஜ்யத்துக்காகக் கழுதையாய்க் கத்துகிறார்கள் என்பதைவிட காக்கையாய்க் கத்துகிறார்கள் என்று மாற்றிக் கொள்ளலாம்!

★

"சென்னை மாகாணத்தின் நிர்வாகத் திறமையைத் தெரிந்து கொண்டு போகும் பொருட்டு வங்க கவர்னர் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்." —ஒரு செய்தி.

முக்கியமாக, ஜனங்களிடமிருந்து அதிகப்படி வரி வசூல் செய்து கையிருப்பு நிதியில் போட்டு வைக்கும் திறமையை அவ[ர்] தெரிந்து கொண்டிருக்கலாம்.

★

"புதுக் கோட்டை சமஸ்தானத்தி[ல்] 1944-45ம் வருஷ பட்ஜெட்டில் அதி[க] வருமானமும் நிறையப் பண மிச்சமும் [...] பட்டிருக்கிறது." —ஒரு செய்[தி].

வங்க கவர்னர் புதுக்கோட்டை நிர்வாக[த்]தையும் கவனித்துவிட்டுப் போயிருக்கலாமே.

★

"கோயமுத்தூர் டிவிஷனில் யா[னை]களைப் பிடித்துக் கட்டுவதற்கு சென்னை சர்க்கார் பட்ஜெட்டில் 27,00[0] அதிகச் செலவு ஏற்பட்டுள்ளது."

—ஒரு செய்[தி].

இது என்ன பிரமாதம்? இந்தி[யா] வெங்கும் அதிகார வர்க்க யானைகளை[க்] கட்டித் தீனி போடுவதற்காக எத்தனையோ கோடி ரூபாய் செலவாகவில்லையா?

★

"இந்தியாவில் 1938-ல் 21,100,000 குரோஸ் தீப்பெட்டிகளும், 1941-ல் 14,800,00-ம், 1943-ல் 17,000,000 குரோஸ் பெட்டிகளும் உற்பத்தி செய்யப்பட்டன. 1944-க்கு இன்னும் விவரம் கிடைக்கவில்லை." —அஸோஸியேடட் [...]

1944-ல் தயாரான பெட்டிகள் இன்னும் எண்ணி முடியவில்லை போலும்!

## அமெரிக்காவுக்குப் போகிறார்



தமிழ் நாட்டிலிருந்து யாராவது டெல்லி முதலிய தூர தேசம் போவதென்றால், முதலில் பெண்ணைப் பெற்றவர்கள் அனுப்புவதற்குத் தயங்குவார்கள். இந்தத் தயக்கத்துக்குக் காரணம், "தூரதேசத்தில் காலத் தவணை வலித்தால் என்ன செய்வது?" என்ற பயம்தான். ஆனால், இப்பொழுது அந்த பயம் கிடையாது. ஏனெனில், குடியேறியுள்ள தமிழர்களுக்கு அங்கங்கே நல்ல நல்ல டாக்டர்கள் கிடைத்திருக்கும்போது பயப்படுவானேன்? தமிழர்களின் இந்த அதிர்ஷ்டத்துக்கு உதாரணம், டெல்லியில் அவர்களின் குடும்ப வைத்தியராக டாக்டர் என். புருஷோத்தமன் கிடைத்திருப்பதுதான். புருஷோத்தமன் வயதில் இளைஞர்; உத்ஸாகி; கைராசிக்காரர். ஏழைகளின் அன்பர்.

இவ்வளவு சிறந்த டாக்டரான புருஷோத்தமன் 'வாட்டுமல் உபகாரச் சம்பளம்' பெற்று மேற் படிப்புக்காக அமெரிக்கா செல்வதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். டாக்டர் புருஷோத்தமன் அமெரிக்காவிலிருந்து டாக்டர் ஷோத்தமராகத் திரும்பி வந்து, டெல்லித் தமிழர்களுக்கு முன்னைவிட புதிய பெரிய சேவை செய்வாரென்று நம்புகிறோம்.

# வான சஞ்சாரம்

## இசைத் தேன்

அபார ஞானமும் அசாத்ய சாதகமும் கொண்டு கேட்போர் பிரமிக்க வேண்டு மென்று மூச்சு விடாமல் பாடுபவர் நமது பிரபல வித்வான்களுக்குள் யாராவது உண்டா என்றால், அவர்தான் முடிகொண்டான் வெங்கடராமய்யர். 12உ திருச்சி நிலையத்தில் 1½ மணி நேரம் அவ்வாறு சரமாரியாய்ப் பொழிந்து தள்ளினார். வாசஸ்பதி, வஸந்தா, பேகடா, பிஹாக் என்று ராகங்களை வஞ்சகமில்லாமல் உழைத்துப் பாடினார். உருப்படிகளில் சங்கதிகளை ஒன்றும் விடாது மேலுக்குமேல் அடுக்கினார். 'கருணை தந்தென்னை' கிருதியில் நிரவல் ஸ்வரம் அமோகமா யிருந்தது. ஆனாலும் முடிகொண்டானின் அபார வித்வத்தைப் பற்றி அறியாமல் அவர் பாட்டைக் கேட்பவர்களுக்கு, "ஐயோ! பாவம்! இப்படி ஏன் இந்த மனுஷர் கஷ்டப் படுகிறார்?" என்று தோன்றும். எவ்வளவோ சங்கீத வித்வத் திறமை படைத்திருந்தாலும், கச்சேரியை ரஞ்சகமாக்கும் வித்தையும் இந்தக் காலத்துக்கு அவசியமா யிருக்கிறது.

சென்ற வாரப் பெரிய கச்சேரிகளில் 19உ திருச்சியில் கேட்ட மகாராஜபுரம் விச்வநாதய்யரது ஒன்று. வழக்கம்போல் தமது கைவரிசையைக் காட்டினார். ஆரபியுடன் ஆரம்பித்துக் கல்யாணி, நீலாம்பரி இவைகளோடு ஷண்முகப்ரியாவைப் பல்லவி ராகமாய் எடுத்துக்கொண்டார். மோஹன மில்லாது விச்வநாத அய்யர் உண்டா? அதையும் ஒருகை பார்த்தார். பல்லவியில் மாத்திரம் சாஹித்யத்தை இரண்டே தடவை சொல்லிவிட்டு ஸ்வரத்தை ஒரே ஓட்டமாய் ஓட்டிவிட்டார்.

அடுத்தபடியாக வித்வத்தான கச்சேரி என்று சொல்லக் கூடியது, 23உ சென்னையில் பிற்பகலிலும் மாலையிலும் பாடிய காளிதாஸ் நீலகண்டய்யரின் கச்சேரியே யாகும். அவருடைய கானத்தைக் கேட்டோர் அவருடைய ஞானத்தை மெச்சாமலிருக்க முடியாது. நடுத்தர சாரீரமே யாயினும் சாதக பலத்தினாலும் நல்வழியினாலும் மதிக்கச் செய்து விடுகிறார் என்பது அவர் இழைத்திழைத்துப் பாடிய கன்னட கௌளை, தோடி, முகாரி, வஸந்தா ராகங்களிலிருந்து தெரிய வந்திருக்கும். ஜீவஸ்வரங்களை வழுவாது நேர்மையாய்ப் பிடித்து ராகபாவம் சிறந்து விளங்கும்படி செய்கிறார். 'முன்னு ராவணு' கிருதியில் நிரவல் ஸ்வரமும் 'வாராணும்' உருப்படியில் கண்ட பாவமும் மெச்சத் தக்கவை. இத்தகைய யோக்கியதைகள் இல்லாமல் மியூஸிக் அகாடெமி சங்கீதக் கலாசாலையின் 'பிரின்ஸிபால்' பதவி வகிக்க முடியுமா?

• • •

திருச்சியில் 14உ கே. தங்கம்மாள் முதல் பாகத்தில் பாடிய காம்போதியி லிருந்து நன்கு சாதகம் செய்த குரலும் ராகங்களை 'பினான்' போட்டுக் கையாளும் திறமையும் கொண்டவர் என்று தெரிந்தது. முதலில் தொண்டை மாத்திரம் சிறிது கட்டியிருந்தது போலும். இருந்தாலும் 'இவனை நினைந்திடு' உருப்படியில் அலட்சியமாய் ஸ்வரம் பாடி ஒரு போடு போட்டார்.



காளிதாஸ் நீலகண்டய்யர்

15உ கச்சேரிகளில் திருச்சியில் வீணையுடன் இழைந்து பாடிய கே. கௌரியம்மாளது நன்றா யிருந்தது. வீணையை விட வாய்ப் பாட்டே அதிகம் கேட்டது. பிலஹரி, ஆபோகியோடு கல்யாணியும் நன்றாய் அமைந்தன.

16உ சென்னைச் சிற்றலை மூன்றாவது ஒலி பரப்பில் கேட்ட நாகர்கோவில் எஸ். ஹரிஹரனின் ஒரு மணி நேரக் கச்சேரி ஜோரா யிருந்தது. நல்ல உதவுபடியும் நல் ரஞ்சகமும் கொண்ட குரலில் காம்போதி, தோடி, எதுகுலகாம்போதி ராகங்களைப் பாணியாய்க் கையாண்டார். 'காணக்கண் கோடி வேண்டும்' உருப்படியில் நிரவல் ஸ்வரம் ஜமாவா யிருந்தது.

அன்று காலையிலும் பிற்பகலிலும் சரோஜினி சுந்தரி இவர்களுக்குப் பதிலாக எஸ். ஜெயலக்ஷ்மி-கல்யாணி, இலங்கு, தன்யாசி ராகங்களையும் உருப்படிகளையும் குளிர்ச்சியாய்ப் பாடியதையும் குறிப்பிடாமலிருக்க முடியாது.

18உ மூன்று பெண்மணிகளின் கச்சேரிகள் ஒன்றுக்குமேல் ஒன்று போட்டா போட்டியாகக் கேட்டன. சென்னையில் நடந்த வைக்கம் ஸரஸ்வதிக்கு அமைந்திருக்கும் சாரீர சம்பத்து அபூர்வம். அத்துடன் வசீகர வழி, நிதானம், நீண்டகார்வை, உருட்டல் புரட்டலுடன் அநுபவித்துப் பாடுகிறார். ரீதி கௌளை, கல்யாணி, கரஹரப்ரியா, பிஹாக் ராகங்கள் வனப்பு மிகுந்து விளங்கின.

அதே நிலையத்தில் வி. சூடாமணி பிற்பகலில் 1 மணி நேரம் மதுரமான குரலில், வெகு நிதானமாய் பைரவி, பந்துவராளி ராகங்களையும் உருப்படிகளையும் வழங்கினார். 'சரண தனயனு' என்ற கமாஸ் உருப்படியில் குளிர்ந்த கார்வைகளோடும் நாஸூக்கு சங்கதிகளோடும் பாடினார்.

அன்று திருச்சியில் கேட்ட டி. ஆர். நவநீதத்தின் வேணுகானமும் அவருக்குப் பக்கவாத்தியமாய் வயலின் வாசித்த எஸ். கோமளவல்லியின் திறமையும் குறிப்பிடத் தக்கவை. ஸஹானா, காம்போதி ராகங்கள் அழகா யிருந்தன. பந்துவராளியில் இருவரும் தங்கள் திறமை முழுவதையும் காட்டினார்கள்.

20உ சென்னையில் பாடிய மங்களம் ராமமூர்த்திக்குச் சுருதியோடு இழையும் இனிய குரல். வளைவு, குழைவு, கார்வை ஒன்றுக்கும் குறைவில்லை. சாவேரியும் மோஹனமும் வனப்பா யிருந்தன. மேல் ஸ்தாயி சஞ்சாரங்களை அநாயாசமாய்க் கையாண்டார்.

22உ திருச்சியில் பிற்பகலிலும் மாலையிலும் ஞானபாவமும் ராக ஆலாபனைகளில் குறிப்பிடத்தக்க

திறமையும் கொண்ட ஓர் பெண் மணியின் கானம் கேட்டது. பாடி னது கே. ஆர். நாகபூஷணம் என்று அறிந்தேன். சிலாங்கி. பிருந்தாவன் என்ற புதுப் பெயர்க ளுடைய ராகங்களோடு கௌரி மனோஹரி, கரஹரப்ரியா இவை களையும் தைரியமாய் வழங்கினார்.

தினந்தோறும்தான் சங்கீதத்தி லேயே மூழ்கி யிருக்கிறோமே, ரேடியோ நிகழ்ச்சிகளில் ரஸிக்கக் கூடிய வேறு ஏதாவது உண்டா என்று அன்றிரவு திருச்சி விசை யைத் திருப்பினேன். டி. கே. எஸ். சகோ தரர் கோஷ்டியார் நடித்த 'மனோஹரா' வெகு ஜோரா யிருக்கக் கண்டேன். மனோஹரனின் வீர ரஸமும், புருஷோத்தமனின் தர்பாரில் சங்கிலி அறுத்து வாள் வீசும் தருணம் பத்மா வதி தடுப்பதுமான கட்டமும் என்னையும் என் பக்கத்தி லிருந்தோரையும் ஸ்தம்பிக்கச் செய்து விட்டன. தற்காலத்தமிழ் நாடகக் கலைக்குத் தந்தையாகிய சம்பந்த முதலி யாரின் நாடகமும், நடிப்பதற்கு டி. கே. எஸ். சகோதரர்களும் சேர்ந்து விட்டால் நன்று யிருப்பதற்குக் கேட்க வேண்டுமா?

23வ. திருச்சியில் பாடிய சாரதா அனந்த ராமனின் வழி மிக ஒய்யாரமா யிருந்தது. ராகங்களிலும் உருப்படிகளிலும் பரவப் பொழிவு விசேஷம். இனிய சாரீரத்தில் கனம்


சாரதா அனந்தராமன்

நயம் கொடுத்து நிதானம், நீண்ட கார்வை, நாஸூக்கான பாணி இவைகளோடு பைரவி, தோடி ராகங்களை வெகு சாலக்காய் விளக்கினார். 'சரவணபவ' உருப் படியில் நிரவல் ஸ்வரம் நன்று யிருந்தது.

அன்று சென்னை நிலையத்தில் வாசித்த எஸ். வித்யாவின் வீணை கானத்தையும் குறிப்பிடாமலிருக்க முடியாது. அவர் வழங்கிய பைரவி ஒன்றே போதும். ஸ்திரீகளின் வீணை வாத்யத்தில் அவ்வளவு அழுத்தமும், கமகப் பொழிவும், சஞ்சாரங்களை இடம் இடமாய்ப் பங்கிடு பண்ணி வழங்குவ தானவை தெளிவும் உருக்கமும் ஒருங்கே சேர்ந்து காண்பது அரிது. முதல் பாகத்தில் கேட்ட வாசஸ்பதியும் அப்படியே.

இன்றுமொரு உயர்ந்த ரகமான கச்சேரி 25வ. சென்னையிலிருந்து கேட்டது. பாடியவர் ஜி. ஏ. நடராஜய்யர். அரிய சாதகமும் அபூர்வ பிருவும் கொண்டு ராகங்களையும் உருப்படிகளையும் விளம்பியது மனதைக் கவர்ந்தது. அவருக்கு அன்று வாய்த்த பக்க வாத்யங்களும் குஷியா யிருந்தன.

26வ. சென்னையில் ஆர். பிரேமாவின் 'வீணை, பாட்டு' என்று கண்டிருந்த போதி லும், வீணையை விட மதுரமான குரலிலிருந்து பாட்டே அதிகம் கேட்டது. பாடியதெல்லாம் ஒழுங்காயும் அழுத்தமாயு மிருந்தன.

## 1945-ம் வருஷத்துக்

### "கல்கி" சிறு கதைப் போட்டி

### பரிசு ரூ. 1000

**முதல் பரிசு ரூ. 500; ஐந்து பரிசுகள் ஒவ்வொன்று ரூ. 100**

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கதைகள், தமிழ் நாட்டு மக்களின் வாழ்க் கையை அடிப்படையாகக்கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும்.

2. கதையின் நீளம் "கல்கி"யில் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதா யிருக்க வேண்டும்.

3. ஒரே ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பி வைக்கலாம். அதற்குமேல் அனுப்பக்கூடாது.

4. சென்ற 1944-ம் வருஷத்துப் போட் டிக்கு அனுப்பிப் பரிசு பெறாத கதைகளைத் திரும்பவும் அனுப்பக்கூடாது. அம்மாதிரி கதைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட மாட்டா.

5. 1945-ம் வருஷம் ஜனவரி 30வ.க்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின் மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. பின் வரும் பஞ்சாயத்தார் பரிசுக் குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பார்கள். அவர்களுடைய தீர்ப்பே முடிவானது.

(1) ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்
(2) ஸ்ரீமதி வி. சரஸ்வதி அம்மாள்
(3) ஸ்ரீ வ. ராமஸ்வாமி ஐயங்கார் (வ.ரா.)
(4) ஸ்ரீ ந. பிச்சமூர்த்தி பி. ஏ.
(5) ஆசிரியர், "கல்கி"

7. எல்லாவற்றிலும் சிறந்த தென்று பஞ்சாயத்தார் கருதுகிற கதைக்கு முதல் பரிசு ரூ. 500 அளிக்கப்படும். அடுத்தபடி யாக ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக் கும் ரூ. 100 வீதம் அளிக்கப்படும். பரிசு பெற்ற கதைகளின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

8. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத் துக்குத் தகுதியான கதைகள் பிரசுரத் துக்கு எடுத்துக் கொள்ளப்படும். அவற் றுக்கு உசிதமான சன்மானம் வழங்கப் படும்.

9. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பஞ்சாயத்தார் கருதி னால், பரிசுத் தொகை பஞ்சாயத்தாரின் உசிதம்போல் பிரித்துக் கொடுக்கப்படும்.

10. இந்தப் போட்டி சம்பந்தமான விதி களை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

11. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்தி லும் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

மானேஜர், "கல்கி"
கீழ்ப்பாக்கம், சென்னை.

# சிவகாமியின் சபதம்

கல்கி

எட்டாம் அத்தியாயம்

## யோக மண்டபம்

நீண்ட காலத்திற்குப் பிறகு நாம் மறுபடியும் கண்ணபிரானுடைய வீட்டுக்குள் பிரவேசிக்கும்போது, அங்கே 'குவா குவா' என்ற சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிடுகிறோம்.

ஆம்; அந்த வீட்டில் பல்லவ ராஜ்யத்தின் பிரஜை ஒன்று அதிகப்பட்டுத்தான் இருக்கிறது.

வாசற்படியில் சிறிது தயங்கி நின்றுவிட்டு உள்ளே சென்றோமானால், அஸ்தமன வேளையின் மங்கிய வெளிச்சத்தில் அங்கே ஒரு அபூர்வமான காட்சியைக் காண்கிறோம்.

விபூதி ருத்ராட்சமணிந்து கனிந்த சிவப்பழமாய்த் தோற்றமளித்த ஒரு சைவப் பெரியார் நிற்கிறார். அவருடைய நீட்டிய இரு கரங்களிலும் ஒரு பச்சைக் குழந்தை — ஆறு மாதத்துக் குழந்தை — காணப்படுகிறது. மூக்கும் முழியுமாக வெண்ணெய் தின்ற கண்ணனைப்போல் திண்ணென்றிருந்த அந்தக் குழந்தைதான் 'குவா குவா' என்று அழுகிறது. அந்தச் சைவப் பெரியாருக்கு எதிரில் கண்ணபிரானும் கமலியும் நின்று குதூகலமாகப் புன்னகை புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

பெரியவர் குழந்தையைக் கமலியின் கைகளில் விட்டு விடப் பார்க்கிறார். கமலி குழந்தையை வாங்கிக்கொள்ள மறுத்துப் பின்வாங்குகிறாள். பெரியவர் அவளைப் பார்த்து, "கமலி! இதென்ன விளையாட்டு?" என்று கோபிக்கிறார். "நான் என்ன செய்வேன்? பாட்டனைக் கண்டால் பேரனுக்கு அவ்வளவு ஆசை. என்னிடம் வரமாட்டேனென்கிறான்!" என்று சொல்கிறாள் கமலி. இதையெல்லாம் பார்த்துக் கண்ணபிரான் சந்தோஷப்பட்டுக் கொண்டு நிற்கிறான்.

குழந்தை 'குவா குவா' என்று கத்திக்கொண்டே காலையும் கையையும் உதைத்துக் கொள்கிறது. கிழவர் "கமலி! உன்னுடைய பொல்லாத்தனம் எல்லாம் உன் குழந்தையிடமும் இருக்கிறது!" என்கிறார்.

அச்சமயம், கொல்லைப் புறத்திலிருந்து அதாவது அரண்மனைத் தோட்டத்திலிருந்து மணி அடிக்கும் சத்தம் கேட்கிறது. பெரியவர் அதைக் கேட்டதும் அதிக பரபரப்பை அடைகிறார். அப்பால் இப்பால் பார்க்கிறார். குழந்தையைத் திடீரென்று தரையில் விட்டு விட்டுத் தோட்டத்தைப் பார்க்க ஓட்டம் பிடிக்கிறார்.

கமலியின் கண்களில் தீப்பொறி பறக்கிறது.

"பார்த்தாயா, கண்ணா, உன் அப்பன் சாமர்த்தியத்தை? பச்சைக் குழந்தையைத் தரையிலே போட்டு விட்டு ஓட எப்படித்தான் மனம் வந்ததோ?"

"கமலி! அப்பாவின் பேரில் குற்றம் இல்லை. நாதப்பிரம்மம் நேரிலே வந்து கூப்பிடும்போது அவர் என்ன செய்வார்?"

"நாதப்பிரம்மமும் ஆச்சு; நாசமாய்ப் போனதும் ஆச்சு! வெறும் ஆஷாடபூதி! அவ்வளவு வைராக்ய புருஷராயிருந்தால், காட்டுக்குத் தபசு செய்யப் போவதுதானே? அரண்மனைத் தோட்டத்தில் சிங்கார

மண்டபத்தில் என்ன வேலை? சமாதி கட்டிக் கொள்ள இங்கேதானா இடம் அகப்பட்டது? அதெல்லாம் போகட்டும்; என் பொல்லாத்தனமெல்லாம் என் குழந்தைக்கும் வந்திருக்கிறதாமே! நான் பொல்லாதவளாம்! கிழவரின் வாய்த் துடுக்கைப் பார்த்தாயா? இவருடைய மகன் மட்டும் ரொம்பச் சாதுவாம்! வாயிலே விரலை வைத்தால் கடிக்கக் கூடத் தெரியாதாம்! பார்! நான் போய் விடுகிறேன். என் தங்கை சிவகாமியைப் பார்க்க வேண்டுமென்று எனக்குக்கூட ஆசையாய் இருக்கிறது. கோட்டைக் கதவு திறந்ததும் இந்தப் பொல்லாத பிள்ளையையும் அழைத்துக்கொண்டு போய் விடுகிறேன், பார்! இந்த அரண்மனைக் காராக்கிரஹத்தில் யார் இருப்பார்கள்?”

இப்படிக் கமலி மூச்சு விடாமல் பேசிக் கொண்டே தரையில் கிடந்த குழந்தையை எடுக்கப்போனாள். கண்ணனும் அதே சமயத்தில் குழந்தையை எடுப்பதற்குக் குனிந்தான். இருவருடைய தலைகளும் மோதிக் கொண்டன. “இந்தப் பொல்லாதவனை நீ ஒன்றும் எடுக்க வேண்டாம்!” என்றாள் கமலி. “அப்படித்தான் எடுப்பேன்; நீ என்ன சொல்கிறது?” என்றான் கண்ணன். இப்படி இவர்கள் குழந்தையைத் தரையிலிருந்து யார் எடுப்பது என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போதே, வாசலில் குதிரைச் சத்தம் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் யாரோ உள்ளே வந்தார்கள். யார் என்று திரும்பிப் பார்த்த கண்ணபிரானும் கமலியும் அப்படியே பார்த்தது பார்த்தபடி பிரமித்து நின்றார்கள்.

ஏனெனில் வந்தவர், சாக்ஷாத் மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்.

“ஓஹோ! இங்கே ஒரு யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது! கமலி! நாட்டிலே யுத்தம் நின்று விடும் போலிருக்கிறது; ஆனால் உங்கள் வீட்டு யுத்தம் மட்டும் நிற்காது போலிருக்கிறதே!” என்று சக்கரவர்த்தி கூறியதும், இருவரும் பெரிதும் வெட்கமடைந்து மறுமொழி சொல்ல முடியாமல் நின்றார்கள்.

பிறகு, மகேந்திர பல்லவர், “கமலி! உன் குழந்தை சௌக்கியமாயிருக்கிறதா?” என்று கேட்டுக்கொண்டே அருகில் வந்து குழந்தையின் முகத்தைப் பார்த்து விட்டு, “கண்ணனை அப்படியே உரித்து வைத்திருக்கிறது. சின்னக் கண்ணன் என்றே பெயர் வைத்து விடலாம். மாமல்லனுக்கும் கலியாணம் ஆகி இந்தமாதிரி மூக்கும் முழியுமாய் ஒரு குழந்தை பிறந்தால், அரண்மனை கல கல வென்று இருக்கும். அரண்மனையில் குழந்தை அழுகைச் சத்தம் கேட்டு வெகுகாலம் ஆயிற்று!” என்று தமக்குத் தாமே பேசிக் கொள்கிறவர் போல் சொல்லி விட்டு, “கண்ணா! உன் தகப்பனார் எங்கே?” என்று கேட்டார்.

“இப்போதுதான் நந்தவன மண்டபத்துக்குப் போனார், பிரபு!” என்றான் கண்ணன்.

“ஆ! மகரிஷி யோக சாதனைக்குப் போய் விட்டாரா?” என்று மகேந்திரர் கேட்டபோது, கமலி இலேசாகச் சிரித்தாள்.

“ஆ! கமலி சிரிக்கிறாள்! உங்களைப் போல் இளம் வயதாயிருப்பவர்களுக்கு யோகம் சமாதி எல்லாம் சிரிப்பாய்த்தானிருக்கும். எங்களைப்போல் வயதாகி உலகத்தில் விரக்தி ஏற்பட்டால் அப்புறம் நீங்களும் போகும் வழிக்குக் கதி தேடலாமென்று யோசிப்பீர்கள். போகட்டும்; உங்களுடைய யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துங்கள். நான் யோகியைப் பார்த்துவிட்டுப் போகிறேன்” என்று சொல்லிக் கொல்லைப்புறத்தை நோக்கிச் சென்றவர், வாசற் படியண்டை சற்று நின்று, “கமலி! உன் சிநேகிதி சிவகாமியைக் கூடிய சீக்கிரத்தில் நீ பார்க்கலாம்!” என்று கூறிவிட்டு, மேலே நடந்தார்.

சக்கரவர்த்தி கொல்லை வாசற்படியைத் தாண்டி மறைந்ததும், கமலி, “கண்ணா! இதென்ன சக்கரவர்த்தி திடீரென்று வந்து நம் மானத்தை வாங்கிவிட்டார்! சிவகாமி கூடிய சீக்கிரம் வருவாள் என்று அவர் சொன்னதைக் கேட்டாயா, கண்ணா? அதெப்படி? யுத்தம் முடிந்துவிடப் போகிறதா? சளுக்கர்கள் தோற்று

ஓடிப் போய் விட்டார்களா?'' என்று ஏதேதோ கேட்டான்.

அந்தக் கேள்விகளை யெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாதவனுய்க் கண்ணபிரான் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தவன், சட்டென்று யோசனையை நிறுத்தி, "கமலி! கொஞ்ச நாளாகவே எனக்கு ஒரு மாதிரி சந்தேகம் இருந்தது; அது இன்றைக்கு ஊர்ஜித மாயிற்று!'' என்றான்.

''அப்படியா, கண்ணு! உனக்கு என்பேரில் சந்தேகம் வந்துவிட்டதா? என்ன சந்தேகம்?''

"உன் பேரில் எனக்கு யாதொரு சந்தேகமும் இல்லை. சந்தேகம் என் தகப்பனர் பேரில்தான். அவர் ஏதோ யோகம், தியானம், நாதப்பிரம்ம உபாசனை என்றெல்லாம் சொல்லிக் கொண்டு நந்தவன மண்டபத்துக்குப் போய் இரவு பகலாய் உட்கார்ந்திருக்கிருரே, அதில் ஏதோ அந்தரங்கம் இருக்க வேண்டுமென்று சந்தேகித்தேன். அந்த சந்தேகம்தான் ஊர்ஜிதமாயிற்று.''

''எப்படி?''

''எப்படியா? அப்பா தான் யோக சாதனை செய்கிற இடத்தில் ஒருவரும் வரக்கூடாது என்று சொல்லி நம்மை யெல்லாம் கட்டுப்படுத்தி யிருக்கிறுரே? சக்கரவர்த்தி மட்டும் எப்படிப் போகலாம்?''

''சொல்லேன், பார்ப்போம்!''

''அதிலேதான் சூக்ஷ்மம் இருக்கிறது. அடிக்கடி மகேந்திர சக்கரவர்த்தி அப்பாவின் யோக மண்டபத்துக்கு வருவதை நான் பார்த்திருக்கிறேன். அவருடைய பேச்சுக் குரலையும் கேட்டிருக்கிறேன். இன்றைக்கு ஏதோ அவசரம் போலிருக்கிறது. அதனால்தான் சக்கரவர்த்தி அரண்மனை வழியாக வராமல் இப்படி வந்திருக்கிருர்!''

''என்ன, கண்ணு, உளறுகிருய்! சக்கரவர்த்திக்கு எது விஷயத்தில் அவசரம்? மோட்சத்துக்குப் போக அவசரமா? உங்க அப்பாவிடம் எதற்காக அவர் வருகிருர்? திருநாவுக்கரசர் பெருமானை விட்டுவிட்டு இப்போது சக்கரவர்த்தி உன் தகப்பனைக் குருவாகக் கொண்டு விட்டாரா?''

''குருவுமில்லை, கிருவுமில்லை, கமலி! மகேந்திர சக்கரவர்த்திதான் நூறு பேருக்குக் குருவா யிருப்பாரே!''

''பின்னே என்ன?''

''கிட்ட வா, சொல்கிறேன். ரொம்ப ரொம்ப அந்தரங்கமான விஷயம். காதோடு சொல்ல வேண்டும். வேறு ஒரு பிராணிக்குத் தெரியக் கூடாது. இந்தப் பயலின் காதிலேகூட விழக் கூடாது!....கமலி, அப்பாவின் யோக மண்டபத்தில், ஒரு சுரங்கவழி இருக்கிறது. அது கோட்டைக்கு வெளியே போகிறது. சக்கரவர்த்தியின் ஒற்றர்கள் அதன் வழியாக அடிக்கடி வந்து போய்க் கொண்டிருக்கிருர்கள் என்று நினைக்கிறேன்..........பார்த்தாயா? இந்தப் பயல் நான் சொல்வதை எப்படி ஒட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிருன்! .........'' என்று கண்ணபிரான் சொல்லிக் குழந்தையின் கன்னத்தை இலேசாகக் கிள்ள, குழந்தை வீர் என்று கத்த ஆரம்பிக்க, கமலி கண்ணபிரானைச் சண்டை பிடிக்க, கண்ணபிரான் ''அவனும் என் கன்னத்தை வேணுமானல் கிள்ளட்டும்!'' என்று கூற, கமலி குழந்தையைப் பார்த்து, ''என் கண்ணே!'' என்று அதற்கு முத்தம் கொடுக்கப் போக, குறுக்கே கண்ணபிரான் தன் கன்னத்தை நீட்ட, கமலி அவனைச் சண்டை பிடிக்க, இப்படி ஏக ரகளையாகி விட்டது.

• • •

இதற்கிடையில் மகேந்திர சக்கரவர்த்தி அரண்மனைத் தோட்டத்திற்குள் புகுந்து விரைவாக நடந்து வஸந்த மண்டபத்துக்குச் சென்றுர்.

காலடிச் சத்தத்தைக் கேட்டதும், சிவனடியாராக விளங்கிய அசுவபாலர் வெளியில் தலையை நீட்டி, ''பிரபு! தாங்கள்தானே? நல்ல சமயத்தில் வந்தீர்கள். இப்போதுதான் மணி அடித்தது!'' என்று கூறி, மண்டபத்தின் நடுமத்தியில் இருந்த சிவலிங்கத்தை அப்பால் நகர்த்தவும், சிவலிங்கம் இருந்த இடத்தில் ஒரு பள்ளமும், அதற்குள் மங்கிய இலேசான வெளிச்சமும் தெரிந்தன. சில விநாடிகளுக்கெல்லாம் அந்தப் பள்ளத்திலிருந்து சத்ருக்னனுடைய தலை எழுந்

தது. பிறகு சத்ருக்னனின் முழு உருவமும் வெளியில் வந்தது.

"சத்ருக்னா! உனக்காகக் காத்திருந்து காத்திருந்து போதும் என்று ஆகிவிட்டது. ஏன் இவ்வளவு தாமதம்? போன காரியம் என்ன? காயா? பழமா?" என்று மகேந்திர பல்லவர் கேட்டார்.

"பல்லவேந்திரர் எடுத்த காரியம் ஏதாவது காயாவது உண்டா? பழந்தான், சுவாமி! எல்லாம் தாங்கள் போட்ட திட்டப்படியே நடந்தது. வேங்கித் தூதனுடன் போன சளுக்க வீரர்களிடம் குண்டோதரன் அகப்பட்டுக் கொண்டான். இருவரும் கொள்ளிடக் கரையில் புலிகேசியின் முன்னிலைக்குக் கொண்டு போகப் பட்டார்கள். இதுவரையில் நிச்சயமாகத் தெரியும். குண்டோதரனிடமிருந்த ஓலை புலிகேசியிடம் அகப்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. தாங்கள் சொல்லியனுப்பிய செய்தியையும் அவன் சொல்லியிருக்க வேண்டும்."

"குண்டோதரனை அப்புறம் பார்த்தாயா? அல்லது அவனிடமிருந்து செய்தி உண்டா?"

"அதுதான் இல்லை. அவனுக்காகத்தான் இத்தனை நேரம் காத்துப் பார்த்தேன். ஆனால் தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை. புலிகேசி மகா மூர்க்கன் என்று கேள்வியாச்சே, சுவாமி! குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்றோ என்று சிறிது கவலையாயிருக்கிறது."

"குண்டோதரனுக்கு ஒன்றும் நேர்ந்திராது, சத்ருக்னா!"

"எப்படிச் சொல்கிறீர்கள், பிரபு!"

"நம்முடைய யுக்தி, நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மகத்தான பலனை அளித்துவிட்டது, சத்ருக்னா!"

"என்ன? என்ன? பல்லவேந்திரா!"

"உனக்கு ஒன்றும் தெரியாதா?"

"குண்டோதரன் பிடிபட்ட மறுநாளே வாதாபி சைன்யம் கொள்ளிடக்கரைத் தண்டைக் கலைத்துவிட்டுக் காஞ்சியை நோக்கிக் கிளம்பிற்று என்று தெரியும்."

"கேள், சத்ருக்னா! புலிகேசி சமாதானத் தூது அனுப்பியிருக்கிறான்! இந்த நேரம் அவனுடைய தூதர்கள் என் மறுமொழிக்காகத் தெற்குக் கோட்டை வாசலில் காத்திருக்கிறார்கள். நான் உன்னைச் சந்தித்து விட்டுப் பிறகு முடிவாக மறுமொழி சொல்லலாம் என்று அவசரமாக இங்கே வந்தேன்."

"பிரபு! புலிகேசியை நம்பலாமா? மகா வஞ்சகன் என்று சொல்லுகிறார்களே!"

"அவநம்பிக்கை கொள்வதற்கு இடமேயில்லை, சத்ருக்னா! ஆனாலும், குண்டோதரன் திரும்பி வந்தால் அவனைச் சில விஷயம் கேட்டு உறுதிப்படுத்திக் கொள்ளலாம் என்று நினைத்தேன். அது முடியாமல் போய் விட்டது."

அச்சமயத்தில், சத்ருக்னன் எந்தப் பள்ளத்திலிருந்து வெளி வந்தானோ, அந்தப் பள்ளத்திற்குள் இருமல் சத்தம் கேட்கவே, பேசிக் கொண்டிருந்த இருவரும், ஒதுங்கி மரியாதையாக நின்ற அசுவபாலரும் திடுக்கிட்டார்கள். அடுத்த விநாடி அந்தப் பள்ளத்தில் குண்டோதரனுடைய தலை தெரியவே எல்லாரும் அளவிறந்த வியப்போடு ஓரளவு அமைதியும் அடைந்தார்கள்.

"குண்டோதரா! உனக்கு நூறு ஆயுசு. இப்போதுதான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். நீ எப்படித் திடீரென்று முளைத்தாய்?" என்று சக்கரவர்த்தி கேட்க, "பிரபு! தாங்கள் அடிக்கடி 'சத்ருக்னரைப் பின் பற்றி நட! சத்ருக்னரைப் பின் பற்றி நட!' என்று சொல்வீர்களே, அது மிக மிகக் கடினமான காரியம். இந்த இருட்டுச் சுரங்க வழியில் இவரைப் பின் பற்றி நான் இரைக்க இரைக்க ஓடோடி வந்தும் இவரைப் பிடிக்க முடியவில்லை. ஏதடா, குட்டைக் காலனாயிற்றே, கொஞ்சம் நின்று போவோம் என்று இவருக்குத் தெரிவதே இல்லை" என்றான் குண்டோதரன்.

"உன் வேடிக்கையெல்லாம் அப்புறம் ஆகட்டும். நீ போன இடத்தில் என்ன நடந்ததென்று விவரமாகச் சொல்லு" என்று மகேந்திர சக்கரவர்த்தி கேட்க, குண்டோதரனும் விவரமாகக் கூறலானான்.

## ஒன்பதாம் அத்தியாயம்

# யுத்த நிறுத்தம்

அன்றிரவு இரண்டாம் ஜாமத்தில், மந்திராலோசனை சபை மறுபடியும் கூடியபோது, கூடியிருந்த எல்லாருடைய முகத்திலும் பரபரப்புக் காணப்பட்டது. வாதாபி வீரர்கள் இருவர் வெள்ளைக் கொடி பிடித்துக் கொண்டு தெற்குக் கோட்டை வாசலில் வந்து நின்றதாகவும், அவர்கள் கொண்டு வந்த ஓலை மகேந்திர சக்கரவர்த்தியிடம் சேர்க்கப்பட்டதாகவும், நகரம் முழுதும் வதந்தி பரவி விட்டது. ஓலையில் என்ன எழுதியிருந்தது. மகேந்திர பல்லவர் என்ன மறு ஓலை அனுப்பப் போகிறார் என்று அறிந்து கொள்ள அவ்வளவு பேரும் ஆவலாக இருந்தார்கள். முக்கியமாக, நரசிம்ம வர்மரின் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தது. கோவைப் பழம் போல் சிவந்த அவருடைய கண்களில் பளிச் பளிச் சென்று மின்னல்கள் தோன்றி மறைந்தன. தம் பக்கத்தில் நின்ற பரஞ்சோதியுடன் அடிக்கடி சமிக்ஞா பாஷையினால் அவர் ஏதோ பேசிக்கொண்டிருந்தார். அப்போதெல்லாம் அவருடைய மார்பு புயலால் தாக்குண்ட கடலைப்போல் மேலே பொங்குவதும் கீழே அடங்குவதுமாக இருந்தது.

சக்கரவர்த்தி வழக்கத்தை விட மிடுக்கான நடையுடன் வந்து சிம்மாசனத்தில் அமர்ந்தார். அவர் கையிலிருந்த ஓலை மீது எல்லாருடைய கண்களும் கவனமும் சென்றன.

"சபையோர்களே! சாயங்காலம் சபை கலையும் சமயத்தில் முக்கியமான செய்தியை எதிர்பார்ப்பதாகச் சொன்னேன். நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மிகவும் முக்கியமான செய்தி வந்திருக்கிறது. மந்திரிகளே! அமைச்சர்களே! தளபதிகளே! எல்லாரும் கேளுங்கள்! யுத்தம் முடிந்துவிட்டது. வாதாபி சக்கரவர்த்தி யுத்தத்தை நிறுத்திவிட்டார். சமாதானத்தையும் சிநேகத்தையும் கோரி ஓலை அனுப்பியிருக்கிறார்!" என்று மகேந்திர பல்லவர் தம் கையிலிருந்த ஓலையைத் தூக்கிக் காட்டியதும், சபையில் ஏற்பட்ட ஹாஹாகாரத்தையும் மற்றும் பல வியப்பொலிகள், குதூகல ஒலிகளையும் சொல்லி முடியாது. இவ்வளவுக்கிடையில், 'ஹூம்' என்ற ஆட்சேபிக்கும் சத்தம் ஒன்றும் கிளம்பத்தான் செய்தது. அது மாமல்லர் இருந்த இடத்திலிருந்து வந்ததென்று சொல்லவேண்டியதில்லை.

"மந்திரிகளே! அமைச்சர்களே! உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். துங்கபத்ரா நதியிலிருந்து நர்மதை நதி வரையிலும் உள்ள மத்ய பாரத தேசத்தின் ஏக சக்ராதிபதி நம்முடைய சிநேகத்தைக் கோருகிறார். நம்முடன் சமாதானத்தை நாடுகிறார். அவருக்கு என்ன மறுமொழி அனுப்பட்டும்? யுத்தத்தை நிறுத்த முடியாது, போர் நடத்தியே தீருவோம் என்று சொல்லியனுப்பட்டுமா? அல்லது, பல்லவ குலத்தின் பரம்பரை தர்மத்தை ஒட்டிச் சிநேகத்தைக் கோருகிற வாதாபி சக்கரவர்த்தியிடம் நாமும் சிநேக தர்மத்தைக் கைக்கொள்ளலாமா? சபையோர்களே! நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். பதினையாயிரம் யானைப் படையையும் ஐந்து லட்சம் காலாட் படையையும் உடைய வாதாபி புலிகேசி மன்னர், யுத்தத்தை நிறுத்திவிட்டு, நமது விருந்தாளியாகக் காஞ்சி நகருக்கு வந்து, சில தினங்கள் இங்கே தங்கி இம்மா நகரின் சிறப்புக்களைப் பார்த்துக் களித்து விட்டுப் போக விரும்புகிறார். அவரைத் தக்க மரியாதையுடன் வர வேற்று உபசரிப்போமா, அல்லது கோட்டைக் கதவுகளுக்கு இன்னும் சில புதிய தாழ்ப்பாள்களைப் போட்டு அடைப்போமா? ஒருவரோடொருவர் கலந்து யோசித்துக் கொண்டு உங்களுடைய ஏகமனதான அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்" என்றார் சக்கரவர்த்தி.

பிறகு சற்று நேரம் சபையில் ஒரே கலகலப்பாய் இருந்தது. மந்திரிமார்களும், அமைச்சர்களும் ஒருவரோடொருவர் உத்சாகமாய்ப் பேசிக் கொண்டார்கள். கடைசியாக, பிரதம மந்திரி சாரங்கதேவ பட்டர் பேச

வதற்கு எழுந்து நின்றபோது, சபையில் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

"பல்லவேந்திரா! தங்களுடைய ராஜதந்திரத்திலும் தீர்க்காலோசனையிலும் இச் சபையோர்கள் அனைவருக்கும் பூரண நம்பிக்கை இருக்கிறது. எந்தக் காரியத்தை எந்தக் காலத்தில் எப்படிச் செய்ய வேண்டுமோ, அப்படித் தாங்கள் செய்து முடிப்பீர்கள் என்று எல்லாரும் உறுதி கொண்டிருக்கிறோம். ஆகவே, முதலில் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்" என்றார்.

அப்போது சக்கரவர்த்தி "பட்டரே! என் அபிப்பிராயத்தைக் கேட்கவும் வேண்டுமா? அவசியத்துக்கு மேலே ஒரு நிமிஷமும் யுத்தத்தை நடத்துவது எனக்குப் பிரியமில்லை. ஒரு உயிர் வீணுகச் சேதம் அடைவதில் எனக்கு விருப்பமில்லை. இந்தக் கோட்டைக்குள் இருக்கும் நாமெல்லாரும் கூடிய வரையில் ஒரு குறைவும் இல்லாமல் சௌகர்யமாயிருக்கிறோம். ஆனல் கோட்டைக்கு வெளியே கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ள பல்லவ நாட்டுப் பிரஜைகள் பெருங் கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். தொண்டை மண்டலத்தில் இந்தக் கோடை காலத்தில் சாகுபடியே நடக்கவில்லை. இன்னும் சில மாத காலத்தில் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பெரும் பஞ்சம் பீடிக்கக்கூடும். இப்பேர்ப்பட்ட நிலைமையில், அனுவசியமாக யுத்தத்தை ஒரு நிமிஷமாவது வளர்த்துவதற்கு எனக்குச் சம்மதமில்லை. மேலும், வீராதி வீரரும் உத்தராபத ஹர்ஷவர்த்தன சக்கரவர்த்தியைப் போர்க்களத்தில் புறங்காட்டச் செய்தவருமான புலிகேசி மன்னர் யுத்தத்தைத் தாமே நிறுத்தி விட்டு வலிய வந்து சமாதானத்தைக் கோரும்போது, நாம் அதை எதற்காக நிராகரிக்க வேண்டும்? என்னுடைய அபிப்பிராயம் அவருடைய கோரிக்கையை ஒப்புக்கொண்டு சமாதானத்தை உடனே நிலைநாட்ட வேண்டுமென்பதுதான்."

இவ்விதம் சக்கரவர்த்தி கூறி நிறுத்தியதும், சாரங்கதேவ பட்டர், "பல்லவேந்திரா! தாங்கள் இப்பொழுது கூறிய விஷயங்கள் எல்லாம் இங்குள்ள அனைவருக்கும் உடன் பாடு. ('இல்லை' என்ற சத்தம் மாமல்லர் இருந்த திசையிலிருந்து வரவே, பட்டர் மேலே கூறியதாவது:) மந்திரி மண்டலத்தைச் சேர்ந்த அனைவருக்கும் உடன் பாடு. ஆனல், ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி எங்களில் சிலருக்கு ஒரு ஐயப்பாடு இருக்கிறது. வாதாபிச் சக்கரவர்த்தியைக் காஞ்சி நகருக்குள் தங்கள் விருந்தாளியாக வரவேற்பது பற்றிச் சொன்னீர்கள். அது பத்திரமான காரியமா என்றுதான் சந்தேகப் படுகிறோம். வாதாபி மன்னர் பழி பாவங்களுக்கு அஞ்சாத வஞ்சகர் என்றும் அசுர குணம் படைத்தவர் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். காஞ்சியைப் பார்க்க வருவதாக அவர் சொல்வதில் ஏதேனும் சூழ்ச்சி இருக்கக் கூடுமல்லவா?" என்றார்.

மகேந்திர பல்லவர் புன்னகையுடன் கூறினார்: "சாரங்கதேவரே! முன் ஜாக்கிரதையுள்ள மதி மந்திரிகளின் கடமையைத்தான் நீங்கள் செய்தீர்கள். யோசிக்க வேண்டிய காரியந்தான். ஆனல், வாதாபி அரசர் கேட்டிருப்பதில் ஒருவிதமான சூழ்ச்சியும் இருக்க நியாயமில்லை. அவருடைய யானைப்படை காலாட்படை எல்லாவற்றையும் காஞ்சிக்கு இரண்டு காத தூரத்துக்கப்பால் அனுப்பிவிடச் சம்மதிக்கிறார். தாம் தமது முக்கிய பரிவாரங்கள் பத்துப் பதினைந்து பேருடன் நிராயுதபாணியாகக் காஞ்சிக்குள் பிரவேசிக்கச் சித்தமாயிருக்கிறார். சபையோர்களே! நம்மிடம் இவ்வளவு பூரண நம்பிக்கை வைத்து வருகிறவரிடம் நாம் எவ்விதத்தில் சந்தேகம் கொள்வது? இதில் சூழ்ச்சிக்கு இடமே இல்லை. ஆகவே, யுத்தமா, சமாதானமா என்பதைப் பற்றித்தான் உங்களுடைய அபிப்பிராயம் வேண்டும்" என்றார்.

மறுபடியும் மந்திரிமார்களும் அமைச்சர்களும் ஒருவரோடொருவர் கலந்து ஆலோசித்தார்கள். கடைசியில், சாரங்கதேவ பட்டர் எழுந்து, "பல்லவேந்திரா! மந்திரி மண்டலத்தார் சமாதானத்தையே விரும்புகிறார்கள். வாதாபி சக்கரவர்த்தியைக் காஞ்சிக்குள் வரவேற்கும் விஷயத்தில் தங்களுடைய உசிதம் எதுவோ அதன்படி செய்யலாமென்று அபிப்பிராயப் படுகிறார்கள்" என்றார்.




# அவன் திருட்டு விற்பனையை ஒழிக்க உதவுகிறான்

தேசிய போர்முனையின் பிரசாரம்

AAA 1384—D. TM

KALKI—1-4-1945



# பாசமும்

— சக்கரவர்த்தி....

கிருஷ்ணன் ஹஸ்திநாபுரத்திலிருந்து திரும்பியதும் சமாதானத்தைப் பற்றியிருந்த கொஞ்ச ஆசையும் இல்லையென்று தீர்ந்தது. குலநாசத்திற்குக் காரணமாகிய யுத்தம் நிச்சயம் என்று ஏற்பட்டதும் குந்தி துக்கத்தில் ஆழ்ந்தாள்.

"அவமானத்தைச் சகித்துக்கொண்டுங்கள், ராஜ்யமும் வேண்டாம் யுத்தமும் வேண்டாம் என்று சொல்ல எனக்கு நா எழவில்லை. க்ஷத்திரிய குலத்தில் பிறந்த என் மக்கள் எவ்வாறு அதைச் சகிக்க முடியும்? ஆயினும் யுத்தம் நடத்தி ஒருவரை ஒருவர் கொன்று குலம் நசித்துப்போய் அதற்குப்பின் யார் என்ன லாபம் பெறமுடியும்? என்ன சுகம் அனுபவிக்க முடியும்? இந்தச் சங்கடத்திற்கு என்ன செய்வேன்?" என்று இவ்வாறு குலநாசபயம் ஒருபக்கமும் க்ஷத்திரியப் பண்பாடு ஒரு பக்கமும் குந்தியின் உள்ளத்தை இழுத்து வேதனை உண்டாக்கிக் கொண்டிருந்தன. தனக்குள் ஆலோசித்தாள் :

"பீஷ்மர், துரோணர், கர்ணன் இந்த மூன்று மகாசூரர்களை என் மக்கள் எவ்வாறு தோற்கடிப்பார்கள்? இவர்கள் யாராலும் எதிர்க்க முடியாத வீரர்களாயிற்றே? இம் மூவர்களைப்பற்றி எண்ணினால் என் உள்ளம் நடுங்குகிறது. மற்றவர்களைப்பற்றி எனக்குச் சிந்தையில்லை. கௌரவசேனையில் இம் மூவரே என் மக்களின் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் சக்தி வாய்ந்தவர்கள். இவர்களில் ஆசாரியரான துரோணர் சிஷ்யர்கள் பேரில் உள்ள பிரியத்தினாலேயோ அல்லது சிஷ்யர்களுடன் யுத்தம் செய்ய மனம் ஒவ்வாமலோ, என் மக்களைக் கொல்லாமலிருக்கலாம். பிதாமகர் என் குமாரர்களின் உயிரைத் தீண்டமாட்டார். கர்ணனே பாண்டவர்களின் முக்கிய சத்துரு. என் புத்திரர்களைக் கொன்று துரியோதனனைத் திருப்தி செய்யவேண்டுமென்று மிகுந்த ஆவல் கொண்டவனாக இருக்கிறான். கர்ணன் மகாசூரனாகவுமிருக்கிறான். கர்ணனை நினைத்தால் என் உள்ளம் தீப்பற்றியது போல் எரிகிறது. அவனை நான் நேரில் கண்டு பேசி அவன் பிறப்பின் உண்மையைச் சொல்லிவிட இதுவே சமயம். தன் பிறப்பைப்பற்றி அறிந்தபின் அவன் உள்ளம் மாறுதல் அடையாமலிராது."

மக்களைப் பற்றிக் கவலையால் பிடிக்கப்பட்டுக் குந்திதேவி இவ்வாறு தனக்குள் பல சிந்தைகள் செய்துகொண்டு கங்கையோரம் கர்ணன் தினமும் ஜபம் செய்யும் இடத்தை நோக்கிச் சென்றாள்.

எதிர்பார்த்தபடி கர்ணன் ஜபத்தில் இருந்தான். கிழக்கு முகமாக நின்றுகொண்டு கைகளை உயரத் தூக்கிச் சூரிய உபாசனையில் ஆழ்ந்திருந்தான். அவன் ஜபம் செய்து முடிக்கும் வரையில் அவனுக்குப் பின்புறமாக நின்று காத்துக் கொண்டிருந்தாள். சூரியன் தன் முதுகைச் சுடும்வரையில் கர்ணன் எதையும் கவனியாமல் ஏகாக்கிரமாகத் தியானத்திலேயே இருந்தான்.

ஜபம் முடிந்ததும் திரும்பிப்பார்த்துக் குந்தி நிற்பதைக் கண்டான். வெய்யிலின்

# தருமமும்

ராஜகோபாலாச்சாரியார்



தாபத்தால் அவன் கர்ணன் உடலின் மேல் இருந்த உத்தரீயத்தைத் தன் தலை மேல் பிடித்துக்கொண்டு நிற்பதைப் பார்த்து இதென்னவென்று வியப்படைந்தாள்.

"ராதைக்கும் அதிரதனுக்கும் மகனான கர்ணன் நான். உங்களுக்கு அபிவாதனம் செய்கிறேன். சேவைக்குக் காத்திருப்பவனாகிய என்னால் தங்களுக்கு என்ன ஆகவேண்டியது?" என்று பெரியோர்களை வணங்கும் முறைப்படி நமஸ்கரித்துக் கேட்டான்.

"கர்ணனே! நீ ராதையின் புத்திரனல்ல. தேரோட்டியும் உன் தகப்பனல்ல. நீ சூத குலத்தில் பிறந்தவன் என்று எண்ணாதே. ப்ருதை என்கிற குந்தியின் வயிற்றில் பிறந்த சூரிய குமாரனாவாய் நீ. உனக்கு மங்களம்!" என்று சொல்லி அவனுக்கு அவன் ஜன்ம கதையை விளக்கிச் சொன்னான்.

"கவச குண்டலங்களோடு தேவ குமாரனாகப் பிறந்த நீ உன் சகோதரர்களை அறிந்து கொள்ளாமல் துரியோதனனுடன் சேர்ந்து அவர்களைப் பகைக்கிறாய். திருதராஷ்டிர புத்திரர்களை அண்டிப் பிழைப்பது உனக்கு அவமானமாகும். நீ அருச்சுனனுடன் சேர்ந்து வீரனாக ராஜ்யத்தை அடைவாயாக! நீயும் அருச்சுனனும் ஒன்று சேர்ந்து துஷ்டர்களை அடக்குவீர்களாக. உலகமே உங்களை வணங்கும். பலராமனும் கிருஷ்ணனும் போல் நீங்கள் இருவரும் பிரசித்தி அடைவீர்கள். தம்பிமார் ஐவர்களுக்கும் மூத்த சகோதரனான நீ அவர்களால் சூழப்பட்டுத் தேவர்களால் சூழப்பட்ட பிரம்ம தேவனைப் போல் ஜொலிப்பாய். தருமசங்கடமான விஷயங்களில் அன்புள்ள தாய்க்கும் தகப்பனுக்கும் சந்தோஷம் தருவதே உயர்ந்த தருமம் என்பது சாத்திரம்" என்றான்.

சூரிய பகவானை உபாசித்து முடித்த சமயத்தில், இவ்வாறு தன்னைப் பெற்ற தாயால் கேட்டுக் கொள்ளப்படும் போது சூரிய பகவானும் குந்தியின் வேண்டுகோளை ஆதரிப்பதாகக் கர்ணன் உள்ளத்தில் தோன்றிற்று. ஆனால் அவன் தன் மனத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டு சூரியன் தன்னுடைய தைரியத்தையும் சத்தியத்தையும் சோதிக்கிறான், அந்தச் சோதனையில் தோல்வியடையலாகாது என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

"க்ஷத்திரியத் தாயே! உன்னால் சொல்லப்பட்ட இந்த வார்த்தை தர்ம விரோதமான பேச்சு. நான் உனக்காக க்ஷத்திரியக் கடமையைத் தள்ளிவிட்டு அதருமத்தில் இறங்கினேனானால் அதைவிடப் பெரும் தீங்கு யுத்தத்தில் எந்தப் பகைவன் எனக்குச் செய்ய முடியும்? குழந்தைப் பருவத்தில் என்னை நீ தண்ணீரில் எறிந்து விட்டு இப்போது ஜாதிக்குரிய சம்ஸ்காரங்களுக்குக் காலம் மீறி விட்ட பிறகு என்னைப் பார்த்து 'நீ க்ஷத்திரியன்' என்கிறாய். தாயின் கடமைகளைச் செய்ய வேண்டிய காலத்தில் செய்யாமல் இப்போது உன்னுடைய மக்களின் நன்மையைக் கருதி எனக்கு இந்தக் கதையைச் சொல்லுகிறாய். இப்போது பாண்டவர்களுடன் நான் சேர்ந்தேனானால் எதிரிகளைக் கண்டு பயந்து அவர்களோடு சேர்ந்தேன் என்றுதான் க்ஷத்திரிய உலகம் சொல்லும். திருதராஷ்டிர புத்திரர்களால் எல்லா சுகமும் சொத்தும்

மதிப்பும் மரியாதையும் இதுவரையில் அனுபவித்துவிட்டு இப்போது யுத்தம் வந்த சமயத்தில் அவற்றை யெல்லாம் பொய்யாக்கிப் பாண்டவர்களுடன் சேரச் சொல்லுகிறாய். திருதராஷ்டிர புத்திரர்கள் என்னை ஓடமாகக் கொண்டு யுத்தம் என்கிற வெள்ளத்தைத் தாண்டப் போவதாகவே நம்பி வருகிறார்கள். நானே அவர்களை யுத்தத்திற்கு அதிகமாகவும் தூண்டி யிருக்கிறேன். அவர்களை நான் இப்போது எப்படி விட்டுவிட முடியும்? உதவி செய்ய வேண்டிய காலம் வந்து எதிரில் நிற்கும்போது துரோகம் செய்துவிட்டுப் பிறகு மானமாகப் பிழைக்க முடியுமா? தாயே! நான் கடனைத் தீர்க்கவேண்டும். உயிரையும் கொடுத்துத் தீர்க்கத்தான் வேண்டும். இல்லாவிடில் சோற்றைத் திருடின அற்பனாவேன். நான் என் சக்தியை யெல்லாம் செலுத்தி உன் புத்திரர்களுடன் போர் செய்யத்தான் வேண்டும். உன்னிடம் பொய் சொல்ல மாட்டேன். நீ என்னை மன்னிக்க வேண்டும். ஆயினும் நீ செய்த முயற்சி முழுதும் வீண் ஆகாது. உன் புத்திரர்களில் அருச்சுனனை மட்டும் எனக்குத் தந்துவிடு. அவனாவது நானாவது இந்த யுத்தத்தில் இறக்க வேண்டியது நிச்சயம். உன்னுடைய மற்றப் புத்திரர்கள் என்னை என்ன செய்தாலும் அவர்களை நான் கொல்லமாட்டேன். வீர மக்களைப் பெற்றுப் புகழ் பெற்றவளே! உனக்கு ஐந்து புத்திரர்கள் எப்படியும் இருப்பார்கள். நானாவது அருச்சுனனாவது இருவரில் ஒருவன் உனக்கு மிஞ்சுவான். மற்ற நால்வரோடு உனக்கு ஐந்து மக்கள் நிச்சயமாக இருப்பார்கள், போ!" என்றான்.

க்ஷத்திரிய தருமத்துக்குப் பொருந்திய இந்த மொழிகளைத் தன் மூத்த மகன் சொன்னதைக் கேட்ட குந்திதேவி அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு பேச முடியாமல் கண்ணீர் விட்டாள்.

"விதியை யார் தடுக்கமுடியும்? நீ நான்கு தம்பிகளுக்கு அபயம் கொடுத்தாய். அதுவே போதும். உனக்கு மங்களம்!" என்று ஆசீர்வதித்து விட்டு வந்தவழி சென்றாள் வீரத்தாய்.

---



# தெய்வப் பிறவி

சௌந்தரம்

தினந்தோறும் பத்து மணிக்குச் சாப்பாடு ஆகி, வேலை முடிந்ததும் நான் எங்கள் வீட்டு முன்பக்கத்து ஜன்னலில் வந்து உட்காருவது வழக்கம்.

எங்கள் வீட்டுக்கருகில் ஒரு பெண்கள் பள்ளிக்கூடம் இருக்கிறது. இந்தப் பள்ளிக்கூடத்துக்குப் போகும் குழந்தைகளையும், உபாத்தியாயினிகளையும் பார்ப்பதில் எனக்கு ஒரு தனி ஆனந்தம்.

இரண்டு நாட்களாக ஒரு புது உபாத்தியாயினி பள்ளிக்கூடத்துக்கு வந்து கொண்டிருந்தாள். எனக்கு அவளை எங்கேயோ பார்த்ததுபோல் இருந்தது. கூப்பிடுவதற்கோ சங்கோஜம். முடிவில் அவளைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலில் ஒருநாள் கூப்பிட்டேன். அவளை அருகில் பார்த்ததும் திடுக்கிட்டவளாய், "நீயா, ஜயா! யாரோ என்றல்லவா நினைத்தேன்? கடைசியில் இதுதானா உன் முடிவு?" என்று பதறினேன்.

"நீலா, நீயா? நீ இங்கிருப்பது எனக்குத் தெரியவில்லையே! உன்னை எப்பொழுது பார்ப்போம் என்று துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தேன். ஏன், என்னை இந்த நிலைமையில் பார்த்ததும் உனக்கு ஆச்சரியமாயிருக்கிறதா? நானேதான் அவனை விட்டு விலகிக் கொண்டேன். அவர் என்னைப் பற்றிக் கஷ்டப்படுவதை என்னால் பார்க்க முடியவில்லை. சரி, எனக்கு நாழிகையாகிறது; போய்ச் சாயந்திரம் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றாள் ஜயா.

அவள் சென்றதும் எனக்குச் சிறிது நேரம் ஒன்றுமே தோன்றவில்லை. பழைய ஞாபகங்களெல்லாம் வந்தன.

• • •

ஜயாவும் நானும் குழந்தைப் பருவத்திலிருந்து ஒன்றாய்ப் பழகியவர்கள். ஜயா எங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுப் பெண். ஜயாவின் அப்பா சீனிவாச அய்யர் பணக்காரர்.

ஜயா குழந்தையிலிருந்தே ரொம்ப இளகிய மனதுடையவள். பிறர் கஷ்டப்படுவதைப் பார்த்துச் சகிக்க மாட்டாள். அவள் வீட்டுப் பண்ணையாள் மாட்டை அடித்தானானால், அவனுடன் சண்டை பிடிப்பாள்.

தாழம்பூவை ஒத்த நிறமும், இடுப்பு வரையில் பின்னிச் சாட்டைபோல் தொங்கும் பின்னலும், குருகுருப்பான முகமும், சாந்தமான கண்களும் உடையவள். அவளுக்குத் தகுந்த வரனாக அவள் தந்தை பார்த்துக் கொண்டிருந்தார். முடிவில் ஒரு வரன் வந்தது. மாப்பிள்ளை அழகன். கல்கத்தாவில் பெரிய வேலை. சொத்தும் கொஞ்சம் இருந்தது. கல்கத்தாவில் நாலு கடைகள் கூட



ஹோட்டல்காரர்:—தலை வலியும் அதுவுமாக நீ இன்றைக்குக் கஷ்டப்பட்டுச் சமைக்க வேண்டாம். நம்ம ஹோட்டலிலே விருந்து சாப்பாடு கொண்டு வரச் சொல்லி விடுகிறேன்.

மனைவி:—ஐயையோ! வேண்டாம்! எனக்குத் தலைவலி சரியாய்ப் போய் விட்டது!

---

இருக்கின்றனர் என்று சொல்லிக் கொண்டார்கள். ஜயாவையும் அவள் கணவனையும் மணக்கோலத்தில் பார்த்ததும் எல்லோரும் ஜயா அதிர்ஷ்டசாலி என்று சொன்னார்கள். கல்யாணம் விமரிசையாக நடந்தது. நான் கல்யாணத்தின் போது ஜயாவின் அருகிலேயே யிருந்தேன். ஜயாவுக்குத் தகுந்த வரனாகத்தான் கிடைத்திருக்கிறது என்று திருப்தியடைந்தேன்.

ஜயாவுக்குக் கல்யாணமான ஒரு மாதத்துக்கெல்லாம் எனக்கும் என் அத்தானுக்கும் விவாகம் நடந்தது. ஜயாவும் நானும் பிரிய முடியாமல் பிரிந்தோம்.

கொஞ்ச நாளில் என் கணவருக்கும் வேலையாகி விட்டபடியால் நானும் பட்டணத்துக்கு வந்து விட்டேன். இரண்டு மூன்று வருஷங்கள் ஊர்ப் பக்கம் போக முடியவில்லை. எனக்கு எப்பொழுதும் ஊர் ஞாபகமாகவே இருந்தது. "ஜயா எங்கிருக்கிறாளோ, எப்படி யிருப்பாளோ" என்றெல்லாம் எண்ணிக் கொள்வேன். கடிதம் போட்டும் தெரிந்து கொள்ள முடியவில்லை. மூன்று வருஷம் கழித்து எங்கள் ஊராகிய ஐயம்பேட்டைக்கு வந்தேன். வந்ததும் "ஜயா எங்கே யிருக்கிறாள்?" என்று அம்மாவைக் கேட்டேன். அவள் கல்கத்தாவில்தான் இருப்பதாகவும், அவள் அப்பா அவளை அழைத்துவரப் போயிருப்பதாகவும் சொன்னாள். நான் அங்கு இருக்கும்பொழுதே அவளும் அங்கு வருவதைப் பற்றிக் குதூகலம் கொண்டேன். நாலு நாட்களுக்குப் பின் ஜயா வந்து விட்டாள். அவளைப் பார்ப்பதற்காக அவள் வீட்டிற்கு ஓடினேன். அவள் முதல் நாள் இரவு வந்ததாகவும், பிரயாண அலுப்பினால் என்னை உடனே வந்து பார்க்க முடியவில்லையென்றும், இப்பொழுது தோட்டத்துப் பக்கம் போயிருக்கிறாள் என்றும் அவள் தாயார் சொன்னாள். நான் தோட்டத்துக்குப் போனேன்.

எங்கள் வீட்டுக்குப் பின்புறம் ஆற்றங் கரை. மாலை வேளையில் படித்துறையில் நின்று கொண்டு பார்த்தால், பசுமையான வயல்களும், நொங்கும் நுரையுமாகச் சுழித்து ஓடும் காவேரியும் தெரியும். நானும் ஜயாவும் எவ்வளவோ நாள் அந்த அழகை அனுபவித்திருக்கிறோம்.

அன்று தோட்டத்திற்குள் நுழைந்ததும் எனக்குப் பழைய விளையாட்டெல்லாம் நினைவுக்கு வந்தது. ஜயாவைத் தேடிக்கொண்டு படித்துறைக்கு வந்தேன். ஓடும் ஆற்றைப் பார்த்த வண்ணம் ஜயா படித்துறையில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். நான் சத்தப்படாமல் போய் அவள் கண்களைப் பொத்தினேன். "யார்? தெரியவில்லையே!" என்று கைகளை எடுத்து விட்டுத் திரும்பினாள் ஜயா. அவள் முகத்தைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டேன். அவள் கண்கள் சிவந்திருந்தன. அழுது கொண்டிருந்தவள் என்னைக் கண்டதும், "லீலா! வா, வா! நேற்றே வரவேண்டும் என்று நினைத்தேன் முடியவில்லை. நீ வருவாயென்று எனக்குத் தெரியுமே!" என்று என்னை வந்து கட்டிக் கொண்டாள். அவள் கலகலப்பாக இல்லையென்று எனக்குத் தோன்றியது. அவள் உடம்பு மெலிந்து எலும்பாயிருந்தது. முகத்தில் சந்தோஷமேயில்லை. என்னிடம் ஏதோ ஒரு முக்கிய விஷயத்தைச் சொல்ல மறைக்கிறாள் என்று தெரிந்து கொண்டேன். "லீலா! முன் எல்லாம் நாம் எத்தனை நாள் இங்கே ஆனந்தத்தோடு பொழுது போக்கி யிருக்கிறோம். நாம் எப்பொழுதுமே குழந்தைகளா யிருந்திருக்கக் கூடாதா என்று எனக்குத் தோன்றுகிறது" என்றாள்.

அவன் கண்களில் நீர் நிறைந்து விட்டது. எனக்கு ஒன்றும் புரியவில்லை. "ஐயா! இது என்ன? ஏன் இப்படி வருந்துகிறாய்?" என்றேன்.

"நீலா! கல்யாணத்தின் பொழுது என்னை எல்லோரும் அதிர்ஷ்டசாலி என்று சொன்னார்கள். என் கணவருக்கு ஏராளமான சொத்து இருப்பதாகச் சொன்னார்கள். அதெல்லாம் வீண் பகட்டு. நான் அதற்காக வருந்தவில்லை. அவர் நாலு வருஷமாகக் கடைக்கணக்குகளைச் சரியாகக் கவனிப்பது கிடையாது. கடையில் ஆட்கள் வைத்ததுதான் சட்டம். அவரவர்கள் அகப்பட்டதைக் கொள்ளையடிக்கிறார்கள். இவருக்கு டாம்பீகம் ஜாஸ்தி. அதனால் பணம் செலவழிப்பது கொஞ்சமல்ல. அதை விட்டு விட்டு, என்னை மணந்ததினால் தான் அவருக்குத் தரித்திரம் வந்துவிட்டதாம். என் தரித்திர ஜாதகம்தான் அவர் கஷ்டத்திற்குக் காரணமாம். கடைக்குக் குறித்த காலத்தில் சரக்கு வராவிட்டாலும், வரவேண்டிய இடங்களில் பணம் வரா விட்டாலும், எல்லாவற்றிற்கும் என்னைத்தான் காரணம் சொல்லுகிறார்.

"அடிக்கடி, நான் இருப்பதால் வேறு ஒருத்தியை மணந்துகொள்ள முடியவில்லை என்கிறார். இதுவரை நான் அவருடைய சந்தோஷமான சொல்லையே கேட்டது கிடையாது. இவரே இப்படியிருக்கையில் வீட்டிலிருப்பவர்களைப்பற்றிக் கேட்கவேண்டுமா? அவர்களும் என்னை வேலைக்காரிக்கும் கேவலமாக நடத்துகிறார்கள்" என்று கூறினாள்.

ஐயா சொல்லியதைக் கேட்டதும் எனக்கு உலகமே சுற்றுவதுபோலிருந்தது. "நம் அருமை ஐயாவுக்கா இவ்வளவு கஷ்டம்?" என்று துடித்தேன். கடைசியில் ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "ஐயா! தைரியமாயிரு: அவர் தானே திருந்திவிடுவார். மனுஷனுக்குப் புத்தி எப்பொழுதும் ஒரே மாதிரி யிருக்காது" என்று தேற்றினேன். இந்தச் சம்பவம் நடந்த இரண்டு நாட்களுக்கெல்லாம் என் கணவருக்கு லீவு முடிந்து விட்டதால், நான் ஊருக்கு வந்துவிட்டேன். அதற்குப் பிறகு ஐயாவைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

* * *

நாலு வருஷங்கள் சென்றுவிட்டன. இன்று தற்செயலாக ஐயாவைப் பார்த்ததும் எனக்குத் திகைப்பாயிருந்தது. சாயந்திரம் அவர் வந்ததும் ஐயாவைப் பற்றிச் சொன்னேன். அவரும் "கடைசியில் இதுவா அவன் முடிவு?" என்று வருந்தினார்.

ஐயாவும் சாயந்திரம் வந்துவிட்டாள். அவளும் நானும் 'டிபன்' சாப்பிட உட்கார்ந்தோம். "நீலா! நானும் நீயும் இம்மாதிரி சேர்ந்து சாப்பிட்டு எவ்வளவு நாளாயிற்று!" என்றாள் ஐயா.

"ஐயா! உன்னை அவர் சரியாக நடத்தவில்லையா? ஏன், உன்னைவிட அவருக்கு

## கொடுக்கல் வாங்கல்



நல்ல மனைவி கிடைத்து விட்டாளா? எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லேன்; கேட்டால்தான் எனக்கு நிம்மதியாயிருக்கும்'' என்றேன்.

''நீலா! அவர் சுபாவம் மாறவேயில்லை. நாளுக்கு நாள் அடியும் வசவும் அதிகமாகி விட்டன. நான் இருப்பதால்தான் தனக்குக் கஷ்டம் என்று சொல்லிக் கொண்டிருந்தார். நான் உயிரை மாய்த்துக் கொள்ளலாமா என்று நினைத்தேன். அம்மா தாங்கமாட்டாளே என்று ஊருக்கு வந்து இரண்டு வருஷம் படித்தேன். அது எனக்கு உதவியாயிருந்தது. இந்த வருஷம்தான் வேலையாயிற்று'' என்றாள் ஐயா.

அதற்குப் பிறகு ஐயாவும் நானும் அடிக்கடி சந்திப்போம். எப்படியோ ஐயா படித்து உபாத்தியாயினியாகவாவது வந்தாளே என்று நான் ஆறுதல் கொண்டேன்.

* * *

இன்னும் இரண்டு வருஷங்கள் ஆயின. என் கணவரைப் பம்பாய்க்கு மாற்றி விட்டார்கள். நாங்கள் பம்பாய்க்கு வந்துவிட்டோம். நாங்கள் குடியிருந்த வீட்டில், எங்களோடு ஒருவர் குடியிருந்தார். அவர் மனைவி எம். ஏ. பட்டதாரியாம். மகா ராங்கிக்காரி. கணவனும் மனைவியும் சதா சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள். அவளுக்கு ஒரு நிமிஷம் வீட்டில் இருப்பது என்றால் வேப்பங்காயாக இருக்கும். அவருக்கு அது பிடிக்காது. அதற்காக அவர் ஒன்று சொன்னால், அவள் ஆயிரம் சொல்வாள். தலையில் அடித்துக் கொண்டு அவர் பேசாமல் வெளியே போய்விடுவார். இப்படியும் ஒரு பெண் உண்டா என்று நான் நினைத்துக் கொள்ளுவேன்.

ஒரு நாள் அவர் ஆபீஸிலிருந்து வரும்போது அவள் வீட்டில் இல்லை; எங்கேயோ போய் விட்டாள். அவர் வெளியில் நின்று கொண்டிருந்தார்.

என் கணவர், ''என்ன, வீட்டில் ஒருவரும் இல்லையா?'' என்று அவரை விசாரித்தார்.

''வீட்டில் ஒருவரும் இல்லாதது இன்றைக்கு என்ன புதிது! மூன்று வருஷமாகத்தான் அனுபவிக்கிறேன், இவளைக் கட்டிக்கொண்டு!'' என்றார் அவர். அதற்குப் பிறகு அவர்கள் இருவரும் ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த அம்மாள் வந்ததும் என் கணவர் உள்ளே வந்து, அவசரம் அவசரமாக ''நீலா!'' என்றார்.

''ஏன்?'' என்றேன்.

''அடுத்த வீட்டுக்காரர் வேறு யாருமில்லை, உன் சிநேகிதி ஐயாவின் கணவர்தான்! அவரிடம் பேச்சுக் கொடுத்ததில் இந்த விஷயம் தெரிந்தது!'' என்றார்.

''நிஜமாகவா? வேண்டும்; அந்த ராக்ஷஸனை அப்படித்தான் படுத்தவேண்டும். என் தோழியின் வாழ்வைப் பாழ்படுத்தியதற்கு இந்தத் தண்டனை போதாது; இன்னும் வேண்டும்'' என்றேன்.

''சத்தம் போடாதே! இது அவர் காதில் விழப்போகிறது!'' என்றார்.

''அவர்கள் சண்டையில் இதை எங்கே கவனிக்கப் போகிறார்கள்!'' என்றேன். அன்றே என் தோழி ஐயாவுக்கு அந்த மனிதரைப் பற்றியும் அவர் அனுபவிக்கும் நரக வேதனையைப் பற்றியும் கடிதம் எழுதினேன். நான் அனுபவிக்கும் சந்தோஷத்தை அவளும் அனுபவிக்க வேண்டும் என்பதுதான் என் கடிதத்தின் நோக்கம்.

நான் கடிதம் எழுதிப் பத்துநாள் இருக்கும். ஒருநாள் காலை வாசலில் வண்டிவந்து நின்றது. யார் வருகிறார்கள் என்று கவனித்தேன். எனக்கு நான் காண்பது கனவா, நனவா என்று தோன்றவில்லை. வாசலுக்கு ஓடினேன். ''ஐயா! ஏன் இப்படித் திடீரென்று வந்தாய்? கடிதம் எழுதக்கூடாதோ?'' என்றேன்.

''எழுதினால் நீ என்ன சொல்வாயோ என்றுதான்! உன் கடிதத்தைக் கண்டதும் எனக்கு அங்கே நிலைகொள்ளவில்லை. வேலையை ராஜிநாமா செய்துவிட்டு வந்துவிட்டேன். அவர் எங்கே?'' என்றாள் ஐயா பரபரப்புடன்.

''ஐயா, நீ அந்த மனிதரின் நிலைமையைப்பற்றித் தெரிந்து சந்தோஷப்படுவாய் என்றல்லவா நான் கடிதம் எழுதினேன்! உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? இங்கே ஏன் வந்தாய்?'' என்றேன்.

''நீலா! எனக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை: நான் எதைக் குறித்து என் வாழ்க்கையை உதறித் தள்ளினேனோ அது பயன்படவில்லை. நான் அவரைப் பிரிந்தால் அவர் சௌகரியமாயிருப்பார் என்று நினைத்தேன். அதனால் அவருக்குத் துன்பம் அதிகமாகி விட்டது.

நான் பொறுமையோடு கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு இருந்திருந்தால் அவருக்கு இந்தக் கஷ்டம் வந்திருக்காது! இப்பொழுதும் அவர் கஷ்டப்படுவதை நான் சகிக்கமாட்டேன். அவர் என்னை ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் அவர் காலடியிலேயே விழுந்து அவருக்குப் பணிவிடை செய்வேன்" என்றாள்.

எனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "அடி, அசடே! இன்னும் சண்டைக்குத்தான் வழி!" என்றேன்.

"சண்டைக்குப் பயந்து அவருடைய துன்பத்தை என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியாது, நீலா?" என்றாள்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் என் உள்ளத்தில் தோன்றிய உணர்ச்சி என்னைப் பரவசப்படுத்தி விட்டது. "ஜயா! நீ கேவலம் மனிதப் பிறவி அல்ல; தெய்வப் பிறவி!" என்றேன்.

ஜயா அவள் கணவன் வீட்டிற்குச் சென்றாள். நானும் பின்னால் சென்றேன். அவள் கணவர் அவளைக் கண்டதும் "ஜயா!" என்றார் ஆச்சரியமும் அன்பும் நிறைந்த குரலில்.

அவர் காலடியில் விழுந்து "என்னை மன்னித்து விடுங்கள்" என்றாள் ஜயா.

"நானா உன்னை மன்னிப்பது? உன்னை அநியாயமாய்க் கொடுமைக்கு ஆளாக்கின என்னைப் பகவானே தண்டித்துவிட்டார்" என்று அவள் கையைப் பிடித்து "எழுந்திரு ஜயா!" என்றார்.

அதற்குள் இளையாள் ஜயாவைப் பார்த்துப் பிரமித்தவளாய், "யார் இவள்?" என்றாள். அவள் கண்கள் கோபத்தால் ஜ்வலித்தன.

அங்கு நடக்கப்போகும் சண்டையைப் பார்க்க மனமில்லாமல் நான் வெளியே வந்து விட்டேன்.

பிறகு, மூத்தாள் இருப்பது தெரியாமல் அவரைக் கல்யாணம் செய்து கொண்டதாகவும், தன்னை ஏமாற்றிய புருஷனிடத்தில் இனிமேல் ஒரு நிமிஷமும் இருக்க முடியாதென்று இளையாள் போய்விட்டதாகவும் தெரிந்தது.

இழந்த வாழ்க்கையை மீண்டும் பெற்று விட்டாள் ஜயா. அவர்களுடைய சந்தோஷமான வாழ்க்கையைப் பார்க்கும்போது எனக்குப் பெரிய நிதி கிடைத்ததுபோல் இருக்கிறது!

# படித்துப் பார்!

## சங்கொலி

[ஆசிரியர் : நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளை; பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை; விலை : ரூ. 3.]

"நாமக்கல் கவிஞர்" என்று சொன்னதும், தயவு செய்து எல்லோரும் ஏகமனதாக "யார் அது?" என்று கேளுங்கள். இது நம்முடைய கோரிக்கை யல்ல. சாக்ஷாத் நாமக்கல் கவிஞருடைய மனமார்ந்த விருப்பம் அதுவேயாகும். இவ்விருப்பத்தை இந்நூலின் அழகிய முகவுரைக் கவிதையிலே பின்வருமாறு கவிஞர் வெளியிட்டிருக்கிறார்:

நாரத கீத மென்ன
நயந்திகழ் பாட லாலே
பாரத நாட்டை யென்றும்
பணிந்திடும் சுப்ரமண்ய
பாரதி பாட்டைக் கண்ட
பழையஇத் தமிழ்நாட்டில்
'யாரது?' என்று கேட்க
யானுமிக் கவிகள் சொன்னேன்!

கம்பர் தமது இராமாயணத்தின் பாயிரத்தில் வால்மீகியைக் கவிதா சிம்மாசனத்தில் ஏற்றி வைத்து வணக்கம் செலுத்திவிட்டு மேலே தமது பாடலைத் தொடங்குவது போல, நாமக்கல் கவிஞரும் பாரதியாரை மேற்படி பாடலில் கவிதா சிம்மாசனத்தில் ஏற்றி வைத்து விட்டுப் பிறகு தமது கவிதைச் சங்கை எடுத்து ஊதத் தொடங்குகிறார். அந்தச் சங்கிலே தான் என்னென்ன மதுர கீதங்களையும், இனிய ஓசைகளையும், கம்பீர நாதங்களையும் கேட்கிறோம்?

எல்லாவற்றுக்கும் மேலாக நம் காதில் ஒலிக்கும் நாதம், தமிழையும் தமிழ் மகனையும் தமிழ் நாட்டையும் புகழ்ந்து பாராட்டித் தட்டி யெழுப்பித் தைரிய மூட்டும் சுதந்தரநாதமே யாகும்:

சங்கொலி எழுந்தது
சங்கட மிழிந்தது
தைரியம் கொள்வாய்
தமிழ் மகனே!

கங்குலும் கழிந்திடும்
கதிரொளி பொழிந்திடும்
கவலை யெல்லாம் விடு
தமிழ் மகனே!

என்று படித்த பிற்பாடும் ஒரு தமிழ் மகன் கவலையை உதறித் தள்ளிவிட்டுத் துள்ளி எழுந்திருக்கவில்லையென்றால், நல்லது. இந்தப் பாட்டையாவது கொஞ்சம் படித்துப் பார்க்கட்டும்:—

மன்னவன் நானே மந்திரி என்சொல்
மற்றவர் யாருக்குச் சுற்றமிது?
என்னுடை நாடு என்னுடை வீடு
யாரிதில் என்னை மிரட்டுவது!
அன்னியர் இங்கே உள்ளவர் யாரும்
அண்டிப்பிழைத்திட வந்தவரே
என்னுடை ஏவல் சொன்னதைச் செய்தோர்
என்னை அடக்குதல் இன்னுமுண்டோ?

ஒருவேளை ராஜா-மந்திரி முதலிய வார்த்தைகளையே பிடிக்காதவர்கள் சிலரும் இருக்கலாம் அல்லவா? அப்படிப் பட்டவர்கள், நாமக்கல் கவிஞர் விரும்புகிற இலட்சிய நாடு எது என்பதைப் பின்வரும் கவியில் தெரிந்து மகிழ்வார்களாக:—

மன்னவன் என்ற மனிதனில்லை—அங்கே
மந்திரி தந்திரி யாருமில்லை
சின்னவர் என்று எவருமில்லை—பட்டம்
தேடிய லைந்திடும் மக்களில்லை

இதுமட்டுந்தானா? நமது நாமக்கல் கவிஞர் விரும்புகிற நாட்டில், கச்சேரி என்றொரு கட்டிடம் இல்லை; அதைக் கண்டு நடுங்குவதும் இல்லை. பள்ளிப்படிப்புக்குச் சம்பளம் இல்லை; பரீட்சைக்கும் பணம் என்றும், பந்தாடப் பணம் என்றும் பிச்சுப் பிடுங்குதல் இல்லை. வேலையில்லாதார் யாரும் இல்லை; ஆனால், வினாருக்கு அங்கு வேலை இல்லை. வாது வழக்குக்கு நேரம் இல்லை; சூதுசெய் பந்தயம் ஏதும் இல்லை; காவேரி நீர்வற்றிப் போவதும் இல்லை; கால்வாய் மேஸ்திரி என்ற தொல்லையும் இல்லை. கள்ளர் பயம் என்ற சன்னை கிடையவே கிடையாது!

அப்பேர்ப்பட்ட அதிசயமான நாட்டுக்கு உடனே ஒரு மூன்றாம் வகுப்பு டிக்கட் வாங்க வேண்டும் என்று தோன்றுதவர்கள் யார் இருக்க முடியும்? இப்போதெல்லாம் உள்ள ரயில் நெருக்கடியை முன்னிட்டு ஒருவேளை டிக்கட் கிடைக்கா விட்டால் கவிஞரின் கற்பனை நாட்டைப் பற்றி இந்த நூலில் படித்தாவது மகிழ்வோமாக.

நாமக்கல் கவிஞருக்கு "காந்திய கவி" என்று ஜொரான் பட்டம் சூட்டப் பெற்றிருக்கிறது. அது முற்றிலும் பொருத்தமானது என்பது இந் நூலிலுள்ள சில கவிதைகளி லிருந்து தெளிவாகிறது. காந்தியின் பேரிலும், காந்தியத்தின் பேரிலும் நாமக்கல் கவிஞருக்கு அளவில்லாத பக்தி. ஆனால், அப்பேர்ப்பட்ட காந்தி மகான் பெருமையை உணராதவர்களை நினைத்தால், கவிஞருக்கு காந்தியத்தைக் கூடப் பறக்க விடும் படியான அவ்வளவு கோபம் பொங்கி வந்து விடுகிறது. அவர்களை மனமார, தாவாரத் திட்டியே விடுகிறார்:—

1944-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தோடு முடிவான மூன்று மாதங்களுக்குப் பொதுஜன உபயோகத்திற்காக

# 2,200 டன் பித்தளைப் பாத்திரங்கள் வெளியில் அனுப்பப் பட்டுள்ளன

பித்தளைத் தகடுகள் வெளியில் அனுப்பிக்கொண்டிருக்கப்படும்



பொறுக்கி எடுக்கப்பெற்ற உற்பத்தியாளர்களும் வியாபாரிகளும்

**கட்டுப்பாட்டு விலைக்கு சாமான்கள் கிடைக்கும்படி உறுதிசெய்யவேண்டியது.**

பித்தளைப் பாத்திரங்களின் விலையை குறைக்கும்பொருட்டு சர்க்கார் 1944-வது வருஷம் ஆகஸ்டு மாதத்தோடு முடிவாகிற மூன்று மாதங்களில் 2,200 டன் பித்தளைத் தகடுகளை சில உற்பத்தியாளர்களுக்குக் கொடுத்திருக்கின்றனர். இவைகளைக் கொண்டு பாத்திரங்கள் செய்யப்பட்டு, அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகள்மூலம் அவை விற்கப்படுகின்றன. ஒவ்வொரு பாத்திரத்திலும் விலை முத்திரை போட்டிருக்கும். அந்த விலைப் பாத்திரத்தின் தராதரத்தைப் பொறுத்து பவுண்டு ஒன்றுக்கு ரூ 2 முதல் ரூ. 2-4-0 வரை இருக்கும்.

சர்க்காரால் வெளியிடப்பட்ட தகடுகளால் செய்யப்படாத மற்ற எல்லாவிதமான பித்தளைப் பாத்திரங்களும் சில்லறையில் பவுண்டு ஒன்றுக்கு ரூ. 2-9-0 தான் விற்கவேண்டும் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது.

1944 வருஷம் ஜூன் மாதம் 12-தேதி இந்தியா கெஜெட் விசேஷ அனுபந்தத்தில், அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளின் ஜாப்தா பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. இதன் பிரதிகளை நியூ டில்லியிலுள்ள சர்க்கார் பிரசுரங்களின் மானேஜரிடமிருந்து பெறலாம். அங்கீகாரம் பெற்ற வியாபாரி யாராவது முத்திரையிட்டதற்குமேல் அதிகவிலை கேட்டால் உங்களூர் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் அவரைப் பற்றி புகார் செய்யத்தயங்காதீர்கள்.

**உண்மையை உணருங்கள்**

## உரிமையைக் கேளுங்கள்

பித்தளை சாமான்களுக்கு ஏற்படுத்தியிருப்பதைவிட அதிக விலை கொடுக்காதீர்கள்

நியூ டில்லி இண்டஸ்ட்ரீஸ் & சிவில் சப்ளை இலாகாவால் வெளியிடப்பட்டது.

AAA 1276—TM.




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

# பந்தின் கர்வம்



ராஜி

பாலுவின் வீட்டின் ஓர் அறையில் விளையாட்டுச் சாமான்களெல்லாம் வைக்கப்பட்டிருந்தன. ஒரு நாள் அந்த அறையில் ஒருவரும் இல்லாமலிருந்த பொழுது, அந்த அறையிலிருந்த கால்பந்து மற்றச் சாமான்களைப் பார்த்துத் திடீரென்று "சீ, சீ! உங்களுடன் சேர்ந்து நானிருப்பது என் கௌரவத்திற்கே குறைவு" என்று துள்ளிக்குதித்து ஒரு மூலையில் போய் நின்றது. இதைக் கேட்ட கிரிக்கெட் பந்துக்கு மிகவும் கோபம் வந்தது. "நான் என்ன உம்மைவிடத் தாழ்ந்தியா?" என்று வெகு கோபத்துடன் கேட்டது. அதற்குக் கோபம் என்பது, அது சப்தம் செய்து கொண்டே அறையைச் சுற்றி வந்ததிலிருந்து தெரிய வந்தது. கிரிக்கெட் பந்துக்குப் பக்கத்திலிருந்த டென்னிஸ் பந்தும் "ஆமாம், ஆமாம்; கால் பந்து எதில் உயர்வு?" என்று கிரிக்கெட் பந்து சொல்லியதை ஆமோதித்தது.

"நான் எல்லாவிதத்திலும் உங்களைவிட உயர்ந்தவன்தான். முதலில் என் பருமனைப் பாருங்கள். என் உருவத்தில் நீங்கள் பத்தில் ஒரு பாகம்கூட இருக்கமாட்டீர்கள். என் உருவம் எவ்வளவு பெரியதாக இருக்கிறதோ அப்படியேதான் என் மூளையும்" என்று மார் தட்டிப் பேசியது கால் பந்து.

"உருவத்தில் நீ எவ்வளவு பெரியவனாக இருந்தால் என்ன? உன் உடல் முழுவதும் காற்றுத்தானே! காற்றுக் குறையக் குறைய உன் புத்தியும் உருவமும் குறைய :வேண்டியதுதான்! நான் அப்படியா இருக்கிறேன்? உன்னைப் போல் நான் உருவத்தில் குறைவதே யில்லையே" என்றது கிரிக்கெட் பந்து.

"உருவத்தில் நான் குறைந்தால் என்ன? காற்று அடித்தால் மறுபடியும் என் சுய உருவத்திற்கு வந்து விடுவேன். உங்களைப் போல இல்லையே! நீங்கள் அடிபட்டுக் கிழிய ஆரம்பித்தால் உங்களை ஒன்றும் செய்ய முடியாதே" என்று சொல்லிவிட்டு ஏளனமாகச் சிரித்தது கால் பந்து.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த கிரிக்கெட் பந்தும் டென்னிஸ் பந்தும் கோபத்தினால் அவை இருந்த இடத்திலேயே ஒரு குதிகுதித்து எழுந்திருந்தன. உடனே இரண்டு பந்தும் சேர்ந்து, "ஏ, கால் பந்தே! உன்னுடைய கைவரிசையை எங்களிடமா காண்பிக்க வேண்டும்! விளையாடும் பொழுது உன்னை ஒவ்வொருவரும் காலால் உதைப்பதைப் பார்த்தால் அல்லவா உன் லட்சணம் தெரியும்?" என்று கூறின.

அப்பொழுது கால்பந்துக்குக் கோபம் வந்தது. குதித்து எழுந்து அந்த இரண்டு பந்துகளையும் தாக்கலாம் என்று நினைத்தது. பிறகு கோபத்தை அடக்கிக் கொண்டு, "ஏ, கிரிக்கெட் பந்தே! நீ நாள் முழுவதும் வெய்யிலில் இருக்கிறாய்! இது மட்டுமா? ஒவ்வொரு முறையும் பலத்த சப்தத்துடன் உன்னை இந்தக் கிரிக்கெட் துடுப்பு அடிக்கும் பொழுது எனக்கு



ரொம்ப வருத்தமாயிருக்கிறது. ஏன் நீ இந்த உலகில் பிறக்கவேண்டும்? ஏ, டென்னிஸ் பந்தே! இரு பக்கங்களிலிருந்தும் டென்னிஸ் மட்டையால் நீ அடிபடுவதைப் பார்த்தால் மனதிற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது" என்று கேலி செய்தது. தங்களைப் பற்றிக் கால்பந்து உயர்வாகப் பேசியதைக் கண்டு கிரிக்கெட் ஆடுப்பும், டென்னிஸ் மட்டையும் ஒன்றையொன்று சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டன.

மாலை மணி ஆறு அடித்தவுடன் அந்த அறையில் பாலு ஓடி வந்தான். கால் பந்தைக் கையில் எடுத்துக் கொண்டான். கால்பந்தும் பெருமையாகப் பாலுவின் கையில் இருந்தது. தோட்டத்தில் பாலு தன் சிநேகிதர்களுடன் கால் பந்து விளையாட ஆரம்பித்தான். பந்து வெகு உயரமாகக் கிளம்பி சிறுவர்களுக்குச் சந்தோஷத்தை உண்டாக்கியது. தன்னுடைய பிரதாபங்களைத் தன்னுடைய சகாக்களுக்குச் சொல்ல வேண்டும் என்று கால்பந்து மனதில் நினைத்துக் கொண்டது. அச்சமயத்தில் பாலு பந்தைப் பார்த்து வேகமாக ஒரு உதைவிட்டான். கால்பந்து வெகு சந்தோஷமாக உயரக் கிளம்பியது. ஆனால், பாவம்! உயரக் கிளம்பிய பந்து கீழே வரவில்லை. பக்கத்து மாடியில் உள்ள கண்ணாடி ஜன்னல் கதவில் போய் ஒரு மோது மோதியது. அவ்வளவுதான்; கண்ணாடி சுக்கு நூறாக உடைந்தது. பையன்கள் யாவரும் பயந்து அவ்விடத்தை விட்டு ஓடினார்கள்.

உடைந்த கண்ணாடித் துண்டு கால் பந்தைத் தவறிக் குத்தி விடவே 'புஸ்' என்று பந்திலிருந்து சப்தம் வந்தது. காற்றுப் போன கால் பந்து தோலாகக் கீழே விழுந்தது. அந்தக் கால்பந்தை ஒருவரும் கவனிக்கவில்லை. அன்று இரவு முழுவதும் அது தோட்டத்திலேயே கிடந்தது. மறுநாட் காலை பாலுவின் வீட்டு நாய் அவ்வழியே வந்த பொழுது, "அடாடா! நம் வீட்டுக் கால்பந்து அல்லவா இது?" என்று பனியினால் நனைந்து கிடந்த பந்தை வாயில் கௌவிக் கொண்டு மெதுவாக விளையாட்டுச் சாமான்கள் இருக்கும் அறைக்குக் கொண்டு வந்து தொப்பென்று கீழே போட்டது.

பாவம், தன் சகாக்களைப் பார்த்த கால்பந்து அவமானமடைந்தது. அன்று முதல் அது இறுமாப்புடன் பேசுவதில்லை. தன் சிநேகிதர்களையும் தனக்குச் சமானம் என்று பாவித்து நடந்து வந்தது. கால்பந்தைப் பாலு சக்கிலியிடம் கொடுத்துச் சரி பண்ணி விளையாடினான் என்று சொல்லவும் வேண்டுமா?



மண்டலம் முழுவதும் சண்டைகள் மலிய
மாந்தர்கள் பெருந்துயர் சேர்ந்துளம் நலிய
கண்டுள பின்வரும் காந்தியை நினையார்
கல்லையும் மண்ணையும் கட்டையும்
அனையார்!

கவிஞரின் கோபம் ஒருபுற மிருக்க, அவருடைய பின்வரும் வரிகளில் கண்ட உண்மையை யாரும் மறுக்க முடியாது:

மன்னரும் வீரரும் மந்திரி மார்கள்
மண்ணொடு மண்ணாய் மறைந்திடுவார்கள்
உன்னரும் காந்தியின் பெரும்பெயர் ஒன்றே
உலகினில் நிரந்தரம் உயர்ந்திடு மன்றோ!

இடையிடையாக, நமது நாமக்கல் கவிஞர் கன்னித் தமிழ் மங்கையை வர்ணித்திருப்பதைப் படித்துப் பரவசமடைந்து விட்டு இந்த விமரிசனத்தை முடிப்போம்:—

குமரிமலர் கொண்டு வந்தனள்—பல
கோத்துக் கோத்தா யின்பம் தந்தனள்
அமரநிலை கொண்டு துள்ளுவேன்—அந்த
ஆனந்தம் என்னென்று சொல்லுவேன்!

வட்ட வடிவத் திலகமும்—புது
வண்ணம் தொடுத்த மலர்களும்
பட்டும் ஜரிகையும் இன்றியும்—தங்கப்
பாவை யெனும்படி நின்றனள்.

பாமர சொற்களிற் பேசினள்—வெறும்
பண்டித வார்த்தைகள் கூசினள்;
ஏமுறும் ஏழையை வாழ்த்தினள்—செல்வர்
இந்திர போகத்தைத் தாழ்த்தினள்.

பற்பல ஆயிரம் ஆண்டுகள்—இந்தப்
பாரில் இருந்தரம் பூண்டவள்
அற்புதம் இன்னமும் கன்னியே!—புது
அழகுதரும் தமிழ் அன்னையே!

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திருக்குறள் பாடிய திருவள்ளுவரும் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் முத்தொள்ளாயிரம் பாடிய புலவர்களும் நேற்றுப் பாடிய பாரதியாரும் இன்று பாடும் நாமக்கல் கவிஞரும் ஒரே தமிழ்ச் சொற்களை ஒரே விதமாக உபயோகிக்கிறார்கள் என்பதைப் பார்க்கும் போது, கன்னித் தமிழின் பெருமையைக் குறித்து, "அற்புதம், அற்புதம்!" என்று ஆயிரந் தடவை சொன்னாலும் காணாதுதான்.

• • •

ஒரு விதத்தில் திருவள்ளுவரையும் கம்பரையும் பாரதியாரையும் காட்டிலும், நமது நாமக்கல் கவிஞர் பாக்கியசாலி. அவர்களுடைய நூல்கள் எல்லாம் அவரவருடைய ஜீவிய காலத்தில் இப்பேர்ப்பட்ட அற்புத அழகு வாய்ந்த 'தமிழ்ப்பண்ணை'ப் புத்தகமாக வெளியான தில்லை அல்லவா?




## இல்லாத குறை

ஒருவர் :—எங்கள் ஊர் எவ்வளவோ பரவா யில்லை. ஒரு ரூபாய் எறிந்தால் ஒரு வீசை நெய் கிடைக்கும்.

இரண்டாமவர் :—அப்படியானால் எங்கள் ஊருக்கு ஏன் வந்தீர் ?

முதல்வர் :—அந்த ஒரு ரூபாய் இல்லாத தால்தான் ! —எஸ். ஆர். துப்புசாமி.

★

## அதிக உயரம்

சீனு :—நான் ஒரு தடவை இருபது அடி நீளமுள்ள ஏணியிலிருந்து கீழே விழுந்திருக் கிறேன்.

சோமு :—ஓ ! அப்படியானால் அதிக காயம் பட்டிருக்குமே !

சீனு :—ஒன்றுமில்லை ; அப்பொழுது தான் முதல் படி ஏறி யிருந்தேன்.

—வி. ஆர். ராஜாராவ்.

★

## தருந்த மனிதர் !

வக்கீல் (வாதியைப் பார்த்து) :—பிரதி வாதி சொன்ன வார்த்தைகளைச் சொல்லும் !

வாதி :—அது ரொம்ப மோசம், ஸார் ! தருந்த மனிதர்கள் எதிரே சொல்லக் கூடிய வார்த்தை யில்லை, ஸார் !

வக்கீல் :—அப்படியானால் அதைக் கனம் நீதிபதி காதுக்கு மட்டும் கேட்கும்படியாக ரகசியமாய்ச் சொல்லும் !

—டி. தேவநாதன்.

★

## யாருக்கு நஷ்டம் !

உபாத்தியாயர் (கிட்டுவைப் பார்த்து) :— நீ சரியாகப் படிக்காவிட்டால் உன் தந்தையை என்னை வந்து பார்த்து விட்டுப் போகச் சொல்வேன் !

டாக்டரின் பிள்ளை :—உங்களுக்குத்தான் பண நஷ்டம் ! அவர் ஒரு தடவை உங்களை வந்து பார்த்தால் பதினைந்து ரூபாய் பீஸ் வாங்கி விடுவார் ! —ஆர். ஷண்முகம்.

## நல்ல சாட்சி !

நீதிபதி :—ஏண்டா குப்பா ! நீ சண்டை போடவில்லை என்பதற்குச் சாட்சி ஏதேனும் உண்டா ?

குப்பன் :—உண்டுங்கோ ; ரௌடி சுப்ப னும் கூடவே இருந்தானுங்கோ ; வேறே சாட்சி இல்லிங்கோ !

நீதிபதி :—ரௌடி சுப்பன்தானே ? அப் படியானால், தலா பத்து ரூபாய் அபராதம் !

—ஏ. எம். நாராயணி.

★

## பரம யோக்கியன் !

வக்கீல் (தன் கட்சிக்காரனைப் பற்றி மாஜிஸ்டிரேட்டுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்பட வேண்டுமென்று) :—என் கட்சிக் காரர் பரம யோக்கியர் ; பரோபகாரி ; நாணயம் தவறாதவர்.

கட்சிக்காரர் :—என்ன ஐயா, என்னைப் பற்றிப் பேசப் பீசு கொடுத்தால் யாரையோ பற்றிப் பிரமாதமாகப் பேசுகிறீரே !

—எஸ். ஜி. ராஜன்.

★

## மரியாதை !

திருடன் :—திருடிவிட்டால்தான் என்ன ? அதற்காக இப்படி முட்டாள், மூடன் என்று மரியாதை இல்லாமல் திட்டுகிறதா ?

நீதிபதி (மிக மரியாதையாக) :—மகா கனம் பொருந்திய திருட்டுப் பிரபு அவர் களே ! தாங்கள் திரு மனது வைத்துத் திருடியதற்காக, தயவு செய்து சர்க்கார்



சாப்பாட்டை வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டுச் சர்க்கார் மாளிகையில் மூன்று மாதம் வாடகை இல்லாமல் எழுந்தருளி யிருக்க வேண்டியது. அடே ! 121 ! ஐயாவை அழைத்துக் கொண்டு போ !

—அரு. மீனாக்ஷி சுந்தரம்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர் : எஸ். இமரி செல்வம், பெரும்பண்ணையூர் போஸ்ட், கொடவாசல்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## ஆரண்ய காண்டம்

### 96. கண்டார்கள் ராமனை !

பரதனும் அயோத்தி மக்களும் சித்திரகூட பர்வதத்தை விட்டு அயோத்திக்குத் திரும்பிப் போனபிறகு, பழைய படி ராமன் சீதை லக்ஷ்மணன் மூவரும், சித்திரகூட பர்வதத்தில் தனித்து விட்டார்கள்.

ஆனாலும் ராமனுக்கு ஒரு யோசனை வந்தது. “இங்கே இருந்தால் அயோத்தி ஜனங்கள் வந்து கொண்டுதான் இருப்பார்கள். மிதிலை நகரத்து ஜனங்களும் வந்து மொய்க்க வேண்டியதுதான் பாக்கி. சித்திரகூட பர்வதத்திலிருக்கிற வரையில் வனவாசம் என்பது ஒன்றுமில்லை. ஆகையால் தெற்கு நோக்கி வெகு தூரம் போய்விட வேண்டியதுதான்” என்ற முடிவுக்கு வந்தான்.

சீதை, லக்ஷ்மணனுடன் எத்தனையோ மலைகளையும், காடுகளையும், ஆறுகளையும் கடந்து ராமன் போகிறான். பலநாள் நடந்து கடைசியாகத் தண்டகாரண்யத்துக்குள் பிரவேசிக்கிறான்.

தண்டகாரண்யம் என்றால் மிகப் பூர்வமான ரிஷி பரம்பரைகள் வசிக்கும் ஆசிரமங்களையுடைய காடு. யோக சித்திகளால் நூற்றுக் கணக்கான வருஷங்கள் தவம் செய்து நீண்டு வளர்ந்த ரோமத்தால் பொதிந்துள்ளவர்கள் அங்கே சிலர். அவர்களுடைய வயதைக் கணக்கிட முடியாது. வேறு சிலருக்கு யோக சாதனம் காரணமாக ரோமம் வளராமல் மழுங்கலாக இருந்தது. மௌன சாதனம் சாதித்துத் தவஞ் செய்கிறவர்கள் வேறு. இவர்களோடு குடும்ப வாழ்க்கை நடத்திய முனிவர்களும் எண்ணிறந்தவர் இருந்தனர்.

பண்(டு)அயன் பயந்தருள்
பால கில்லரும்,
முண்டரும் மோனரும்
முனிவ ரும்எனத்
தண்டக வனத்(து)உறை
தவத்து ளோர்கள்தாம்,
கண்டனர் இராமனைக்
களிக்கும் சிந்தையார்.

[பண்டு அயன் பயந்தருள் பாலகில்லர்: பிரமனே பெற்றான் என்று சொல்லும்படி அத்தனை நெடுங்காலம் தவம் செய்துவந்த பாலகில்லர்; பாலகில்லர்: பகவானது ரோமத்திலின்று தோன்றியவர்; முண்டர்: ரோமம் முளையாதவர்; மோனர்: மனம் வாக்கு, உடல் எல்லாம் கடவுளிடத்துச் சென்ற காரணத்தால் பேச இயலாதிருந்த யோகிகள்; முனிவர்: மனைவி மார்களோடு வாழ்ந்து தவத்தில் ஈடுபட்டவர்; தண்டக வனத்து உறை தவத்து ளோர்கள் தாம்: தண்டகாரண்யத்து ரிஷிகள்; கண்டனர் ராமனை: ராமனைப் பார்த்தார்கள்; களிக்கும் சிந்தையார்: ஒரே ஆனந்தக் களிப்பினராய்.]

தண்டகாரண்யம் நல்ல வளம் உள்ளது. தவஞ்செய்ய எல்லா வசதிகளும் அங்கே உண்டு. ஆனால் அரக்கர்களின் கொடுமை காரணமாக ஒரு செயலும் செய்ய முடியாமல் மனசிலே புழுங்கிக் கொண்டிருந்தார்கள் ரிஷிகள். ராமனது வருகையால் அவர்களுக்குப் புத்துயிர் உண்டாயது. இறந்தவர் உயிர்த்து எழுந்தார் என்றுதான் சொல்ல வேண்டும் அவர்களை.

கனைவரு கடுஞ்சினத்(து)
அரக்கர் காய,ஓர்
வினைபிறி(து) இன்மையின்
வெதும்பு கின்றனர் ;—
அனல்வரு கானகத்(து)
அமு(து)அ ளாவிய
புனல்வர உயிர்வரும்
உலவை போல்கின்றார்.

[கனைவரு கடுஞ்சினத்து அரக்கர்: மிக்க ஆர்ப்பாட்டத்தோடு கோபத்தைச் செலுத்தும் அரக்கர்கள்; காய: கொடுமை செய்ய; ஓர் வினை பிறிது இன்மையின்: செயல் ஒன்றும் செய்ய இயலாமையால்; வெதும்புகின்றனர்: மனசுக்குள்ளேயே புழுங்குகின்றனர்.]

மலையின் அடிவாரத்தில் ஒரு வளமான காடு. கோடை காலம்: நாலைந்து மாசமாக மழையே இல்லை. மரம் செடி கொடிகள் எல்லாம் உலர்ந்து போய் விட்டன. பச்சை இலை ஒன்றில்லை. பார்த்தால் எல்லாம் உலர்ந்த விறகு தான் என்று சொல்ல வேண்டும். அந்த வேளை, மலையின்மேல் அமோகமாக மழை பெய்தது. பெருவெள்ளம் புறப்பட்டு வறண்டுபோன அந்தக் காட்டுக்குள்ளே பிரவேசித்தது. ஈரம் மண்ணுக்குள் வெகு தூரம் இறங்கி விட்டது. தண்ணீர் வந்து விட்டது என்று வேர்களுக்குத் தெரிந்து விட்டது. கொடி செடி மரங்களுக்கும் தெரிந்து விட்டது. மறுநாட் காலை காடெங்கும் துளிர்த்து விட்டது.

அனல்வரு கானகத்(து)
அழு(து)அ ளாவிய
புனல்வர உயிர்வரும்
உலவை போல்கின்றார்

உலர்ந்து போன மரஞ் செடிகள் துளிர்த்ததைப் பார்த்தோம். இனி, இன்னொரு காட்சியைப் பார்க்கலாம். ஒரு காட்டில் நெருப்புப் பற்றிக் கொண்டது; அது நாலா பக்கமும் சூழ்ந்து கொண்டது. நெருங்கி நெருங்கி வருகிறது. வெக்கையும் ஜ்வாலையும் வந்து தாக்குகின்றன. அகப்பட்ட பிராணிகள் அங்குமிங்குமாக ஓடுகின்றன. சுற்றிச் சுற்றி வருகின்றன. தப்புவதற்கு வழியொன்றுமில்லையென்று ஒரே வெறியில் நெருப்புக்குள்ளேயே பாய்ந்து ஓடுகின்றன. ஒரு மானும் கன்றும் அப்படிப் பாய்ந்தன. அதனால் தாய் ஒரு பக்கமாகவும் கன்று வேறு ஒரு பக்கமாகவும் ஓட நேர்ந்தது. நெருப்புப் படலத்தைக் கடந்து எப்படியோ இரண்டும் தப்பித்துக் கொண்டன. கன்றானது மிகவும் அலமந்து காவற்றண்டு அங்கும் இங்குமாக ஓடுகிறது. தாயைக் காண முடியவில்லை. நெடுநேரங் கழித்துத் தூரத்தில் தாய் வருவதைக் கண்டு கொள்ளுகிறது. அதன் ஆனந்தம் எப்படியிருக்கும்!

ராமன் வருகையால் முனிவர்களுடைய ஆனந்தம் அந்தக் கன்றின் ஆனந்தத்தைப் போல இருந்தது.

ஆய்வரும் பெருவலி
அரக்கர் நாமமே
வாய்வர அலமரும்
மறுக்கம் நீங்கினார்;—
தீவரு வனத்திடை
விட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய
கன்றின் தன்மையார்.

விருத்தியாகிக் கொண்டே வருகிறது அரக்கர்களின் சக்தி. அப்பேர்ப்பட்ட அரக்கர் பெயரை அகஸ்மாத்தாய் வாய் விட்டுச் சொல்ல நேர்ந்து விட்டால் அப்படியே நடுங்கி விடுவார்கள் முனிவர்கள். கம்பரும் முனிவர்களுடன் இருந்து அவர்களது பயம் கஷ்டம் எல்லாவற்றையும் தானும் அனுபவிக்கிறார். ராமன் வந்ததும் கவிஞருக்கும் சந்தோஷம் உண்டாகி விடுகிறது. அந்தச் சந்தோஷத்தை மேலேயுள்ள இரண்டு கவிகளிலும் நாம் பார்க்கிறோம்!



## காலக்ஷேபம் :: புதிய பரிசுத் திட்டம்

பல நேயர்களின் அபிப்பிராயத்தை அனுசரித்துக் காலக்ஷேபப் பரிசுத் திட்டத்தைப் பின்வருமாறு மாற்றியமைத்திருக்கிறது:—

முதற் பரிசு ரூ. 5: ஒவ்வொரு "கல்கி" இதழிலும் வெளியாகும் நேயர்களின் காலக்ஷேபங்களில் எல்லாவற்றிலும் சிறந்ததாகக் கருதப்படும் காலக்ஷேபத்துக்கு முதற் பரிசு ரூபாய் ஐந்து அளிக்கப்படும்.

ஒரு ரூபாய் பரிசு: மற்றப்படி ஒவ்வொரு "கல்கி" இதழிலும் காலக்ஷேபப் பக்கத்திலோ, வேறு உட்பக்கங்களிலோ பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு காலக்ஷேபத்துக்கும் ஒவ்வொரு ரூபாய் வீதம் பரிசு அனுப்பி வைக்கப்படும்.

மேற்கண்ட புதிய காலக்ஷேபப் பரிசுத் திட்டம் ஜனது 1945௵ ஏப்ரல் 1உ "கல்கி" இதழிலிருந்து அமுலுக்கு வருகிறது.

# தமிழுக்கு நோபல் பரிசு

சுவாமி சுத்தானந்த பாரதி

பணம் வந்தால் உடனே கண்டபடி வாரி இறைத்து விடுவார் பாரதியார். கையில் இல்லாமற்போனால் அவருக்கு விநோதமான எண்ணங்கள் தோன்றும். அவர் கனவு லட்சம், பத்து லட்சத்திலேதான் நிற்கும்.

ஒருநாள் அவர் விசுவாத பாரதியை உபாத்தியாயர் வகுப்பில் புகுந்து, இழுத்துக் கொண்டு போனார். சிஷ்யர், “வகுப்பிற்குப் போகவேண்டும். செய்தியை உடனே சொல்லும்” என்றார்.

“ஓய் ஓய், உமது வகுப்போ புளியங்காய்த் தோப்போ! பெரிய காரியங்கள் நடக்கப் போகின்றன, வாரும்காணும்” என்று இழுத்துச் சென்றார் பாரதியார். சிந்துபூந் துறை ஆற்று மண்டபத்தில் இருவரும் அமர்ந்தனர். சிஷ்யர், “குருவே, என்ன செய்தி? சொல்லலாமே?” என்று பணிவாகக் கேட்டார்! “நம்மிடம் சொல்லிச் செய்யும் வழக்கம் கிடையாதையா; செய்து விட்டுத்தான் சொல்வோம்” என்றார் பாரதியார். பிறகு, மார்பைத் திருத்திக்கொண்டு தலை நிமிர்ந்து எழுந்தார். முன்னால் வலது காலை வைத்து ஒரு தாவு தாவினார்:

எடுத்த காரியம் யாவினும் வெற்றி

என்ற பாட்டைக் கனிரென்று பாடினார். சிஷ்யர் திகைப்பும் வியப்புமாக உடல் சிலிர்க்க நின்றார். பாட்டு நின்றது.

பாரதி :—அப்பா! இப்போது தாகூர் எங்கிருக்கிறான்?

சிஷ்யன் :—மதுரையில்.

பாரதி :—உடனே புறப்படு. சலோ, மதுரை!

சிஷ்யன் :—நாம் போவதற்குள் தாகூர் சென்றுவிட்டால்?

பாரதி —அட அபசகுனமே! நமது தமிழ் நாட்டுக்குத் தாகூர் வந்து நம்மைக் காணாமல் செல்லுவதா? உடனே தந்தி கொடு.

சிஷ்யன் :—விலாசம் தெரியாதே!

பாரதி :—அட, சீ! ‘தாகூர், மதுரை’ என்றால் தந்தி பறக்கும் ஐயா!

சிஷ்யன் :—சரி, என்ன செய்தி அறிவிக்க?

பாரதி :—‘தமிழ்நாட்டுக் கவியரசர் பாரதி உம்மைக் கண்டு பேச வருகிறார்’ என்று உடனே தந்தி அடியும்.

சிஷ்யன் :—அங்கே போய் என்ன செய்யப் போகிறீர்?

பாரதி :—ஓய் ஓய், நாம் தாகூருக்கு ஒன்று சொல்லுவோம். நீர் வங்கக் கவி. நாம் தமிழ்க்கவி. விக்டோரியா ஹாலில் கூட்டம் கூட்டுவோம். உமது நோபல் பரிசைச் சபைமுன் வையும். நாமும் பாடுவோம், நீரும் பாடும். சபையோர் யார் பாட்டுக்கு அப்ளாஸ் கொடுக்கிறார்கள் என்று பார்ப்போம். நமது பாட்டே ஜயம் என்று சபையோர் மெச்சுவார்கள். உடனே உமது கையால் எமக்கு நோபல் வெகுமதியைத் தந்து செல்ல வேண்டியது என்போம்.

சிஷ்யன் —அதெப்படி? அவர் வங்காளத்தில் பாடுவார்; நீர் தமிழில் பாடுவீர். வங்காளத்திற்குக் கிடைத்த நோபல் பரிசு உமது தமிழுக்கு எப்படிக் கிடைக்கும்?

பாரதி :—அட அபஜெயமே! சர்வேசுவரன் தமிழனுக்கு எல்லாம் வைத்தான்; புத்திமட்டும் வைக்கவில்லை. நேற்றுப் பிறந்த வங்காளந்தான் நோபல் பரிசு வாங்க வேண்டும்; கற்பகோடி காலம் வாழ்ந்த தமிழ் அந்தப் பரிசுக்கு லாயக்கில்லையோ?

வானம் அளந்த தனைத்தும் அளந்திடும்<br>வண்மொழி வாழியவே

என்ற பாட்டை வீராவேசமாகப் பாடி, யாமறிந்த மொழிகளிலே என்று ஒரு பிர்க்கா வாங்கினார்.

சிஷ்யன் :—மன்னிக்க வேண்டும். தமிழ் வங்கத்திற்குத் தாழ்ந்ததில்லை. ஆனாலும், அவர் உலக மகாகவி. உலகப் புகழ் பெற்றவர்.

பாரதி :—நாம் உலகப் புகழ் பெற முடியாதோ? அட தரித்திர மனிசா! அந்த இழவுக்குத்தான் நோபல் வெகுமதியைத் தாகூரிடமிருந்து வெல்ல வேண்டும் என்கிறோம்.

இந்த மாதிரியே பேசிக்கொண்டு பாரதியார் இரவில் எட்டயபுரம் பங்களாவுக்கு வந்தார். அங்கே திறவையில் பாரதியாருடன் திரௌபதி நாடகம் பார்த்த நண்பர் வரவேற்றார். பாரதியார், “நண்பா! நமது பாஞ்சாலியைப் பார்!” என்று பாஞ்சாலி சபதத்தைப் பொழிந்து ஆடித் தீர்த்தார். பிறகு நன்றாகச் சாப்பிட்டுத் தலையைச் சாய்த்தார். மறுநாட் காலையிலேதான் எழுந்தார். நோபல் வெகுமதி விஷயம் மறந்தே போயிற்று.

# யார் பொறுப்பாளி?

— விந்தன் —

*[அதிகார வர்க்கத்தின் சந்நிதானம்; ஸ்ரீமான் பொதுஜனம் பிரவேசிக்கிறார்.]*

அதிகார வர்க்கம் :—உமக்கு என்ன ஐயா வந்து விட்டது?

பொதுஜனம் :—ஏதாவது வந்தால்கூடத் தேவலை! அப்பப்பா! இந்தக் காலத்தில் ஏதாவது ஒரு சாமான் வாங்கவேண்டுமென்றால் நான் படும் கஷ்டமிருக்கிறதே.........

அ. வ :—அதுதான் மிஸ்டர் கட்டுப் பாட்டுச் சட்டம் அவர்களை அனுப்பி வைத்திருக்கிறோமே? அவர் உமக்கு வேண்டிய உதவியெல்லாம் செய்வார், போம்!

பொ. ஜ :—என்ன உதவி செய்வார்? ஏற்கெனவே விற்கும் அநியாய விலை போதாதென்று இன்னும் கொஞ்சம் விலையைக் கூட்டி நிர்ணயிப்பார்! அவ்வளவுதானே?

அ. வ :—உன் ...... போம், வெளியே!

*[அதிகார வர்க்கம் கதவைத் 'தடா' லென்று சாத்துகிறார். ஸ்ரீமான் பொதுஜனம் கட்டுப் பாட்டுச் சட்டத்தைத் தேடிக் கொண்டு போகிறார்.]*



கட்டுப்பாட்டுச் சட்டம் :—என்னைத் தேடி வந்து என்ன பிரயோஜனம், ஐயா? எனக்கு என்னமோ உமக்கு நன்மை செய்யவேண்டும் என்றுதான் இருக்கிறது. ஆனால், லஞ்சப் பேய் என்னை ஒன்றும் செய்ய முடியாமல் செய்து விடுகிறதே!

*[தலையில் தட்டிக் கொண்டே சென்று ஸ்ரீமான் பொதுஜனம் லஞ்சப்பேயைச் சந்திக்கிறார்.]*

பொ. ஜ :—ஏன், ஐயா! வியாபாரிகள் உமது வயிற்றை நிரப்புகிறார்கள் என்பதற்காக என்னை இப்படி அலைய வைக்கலாமா?

லஞ்சப் பேய் :—நானா உம்மை அலைய வைக்கிறேன்? கனம் 'கறுப்பு மார்க்கெட்' அல்லவா உம்மை அலைய வைக்கிறார்?

*['கறுப்பு மார்க்கெட்' இருப்பிடம்; பொதுஜனம் பிரவேசிக்கிறார்.]*

கறுப்பு மார்க்கெட் :— வாருங்கள், வாருங்கள்! என்ன, சௌக்கியந்தானே?

பொ. ஜ :—நீங்கள் சௌக்கியமாயிருக்கும் வரையில் எனக்குச் சௌக்கியம் ஏது?

க. மா :—என்ன ஐயா, அப்படிச் சொல்கிறீர்? நானே இல்லாவிட்டால் நீர் இன்னும் எவ்வளவோ கஷ்டப்படுவீரே?

பொ. ஜ :—வேடிக்கைதான்! நீர் இல்லாவிட்டால் எனக்கு என்ன கஷ்டம்?

க. மா :—அநியாய விலைக்குக்கூட எந்தச் சாமானும் உமக்குக் கிடைக்காது!

பொ. ஜ :—ஸ்ரீமான் வியாபாரம் அப்படி ஏன் சாமான்களை அமுக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்?

க. மா :—அவரையே கேளும்.

*[ஸ்ரீமான் வியாபாரத்துக்கு முன்னால் பொதுஜனம்.]*

பொ. ஜ :—ஏன் ஐயா, இப்படிச் சாமான்களை அமுக்கி வைத்துக்கொண்டிருக்கிறீர்?

ஸ்ரீமான் வியாபாரம் :—நான் என்ன செய்வேன், பொதுஜன ஸ்வாமி! மிஸ்டர் செக்ஷன் 93 வியாபார வரி, அது, இது என்றெல்லாம் உத்தரவு போட்டு என் உயிரை வாங்கித் தொலைக்கிறார்; நான் உமது உயிரை வாங்கித் தொலைக்கிறேன்!

*[ஸ்ரீமான் பொதுஜனம் மிஸ்டர் 93-வது விதியைச் சந்திக்கிறார்.]*

பொ. ஜ :—அட்வைஸரி ஆட்சி யாரே! கள்ளுக் கடைகளைத்தான் திறந்து விட்டீர்; வியாபார வரியை மட்டும் ஏன் ஐயா விடாப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறீர்? பணத்துக்கும் அப்படி ஒன்றும் பஞ்சம் இருப்பதாகத் தெரியவில்லை. கோடிக் கணக்கில் கையிருப்பு வைத்திருக்கிறீர்! அந்தக் கையிருப்புப் பணத்தைக் கொண்டு எங்கள் கஷ்டத்தைக் கொஞ்சம் தீர்க்கக் கூடாதா?

மிஸ்டர் 93 :—இந்த யுத்த காலத்தில் உம்முடைய கஷ்டத்தையாவது, நான் தீர்ப்பதாவது! உமது தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பை வாங்கிக்கொண்டு உம்முடைய கஷ்டத்தைத் தீர்த்து வைப்பது தானே? என்னைக் கேட்டுக் கொண்டுதான் உங்கள் காங்கிரஸ் மந்திரிகள் ராஜிநாமா செய்தார்களா? அதோ, எல்லைப்புறத்தில் டாக்டர் கான் சாயபு மந்திரி சபை அமைத்தாரே, நான் குறுக்கே நின்றேனா?

பொ. ஜ. (தமக்குள்):—சொன்னார் எங்கள் ராஜாஜி, அப்பொழுதே சொன்னார்!

கையிலிருந்த ராஜ்யத்தைக்
கைநழுவ விட்டு விட்டுக்
கஷ்டப் படலாச்சு, கடவுளே!

கவர்னர்கள் ஆட்சியாச்சு,
கள்ளுக்கடை திறக்கலாச்சு;
கம்யூனிஸ்ட் வேட்டையாச்சு, கடவுளே!

*[பாடிக்கொண்டே போகிறார்.]*

# "அட கழுதை, நீயா!"

— நாடோடி —

என்னுடைய வெகு நாளைய நண்பர் ஒருவர் திடீரென்று இரண்டு நாளைக்கு முன்பு என்னோடு கோபித்துக் கொண்டு விட்டார். கோபித்துக் கொண்டது போதாது என்று என்னை ஒருமாதிரி பார்க்கவும் ஆரம்பித்துவிட்டார். என்னைப் பார்த்த போதெல்லாம் அவர் ஆடு திருடின கள்ளனைப்போல் விழிக்க ஆரம்பித்தார். அதிலிருந்து என்னை ஒரு திருடனைப் பார்ப்பது போல் பார்க்கத் தொடங்கியிருக்கிறார் என்று தெரிந்து கொண்டேன். இந்தக் காலத்தில் திருடர்களைவிட, திருட்டுக் கொடுத்தவர்கள்தானே ஆடு திருடின கள்ளர்களைப்போல் விழிக்கிறார்கள்?

ஆனால் என்ன யோசித்துப் பார்த்தும், அவர் சொத்தை நான் என்ன திருடினேன் என்றே எனக்குப் புலப்படவில்லை. எனக்குத் தெரிந்து அவர் சாமான் ஒன்றையும் நான் விளையாட்டுக்குக் கூடத் திருடினதாக ஞாபகமில்லை. ஆகவே விஷயம் தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கையில் எங்கள் இருவருக்கும் பொது நண்பரான ஒருவர் விஷயத்தை விளக்கினார்.

சதிபதிகள் வாழ்க்கை நடத்துவது எப்படி என்பதைப் பற்றி நன்னு, பின்னுவென்று எத்தனையோ புஸ்தகங்கள் எழுதப் படுகின்றன அல்லவா? அவற்றில் என் நண்பர் ஒரு புஸ்தகம் வாங்கி வைத்திருந்தார். அதை நான் இரவல் வாங்கிப் படித்து விட்டுத் திருப்பிக் கொடுத்து விட்டேன். அப்படித் திருப்பிக் கொடுத்த அந்தப் புஸ்தகத்தின் நடுவில், நண்பர் வெகு சுவாரஸ்யம் என்று கருதியிருந்த சில பக்கங்களைக் காணவில்லையாம். அதனால்தான் நண்பர் என்னை அப்படி ஆடு திருடின கள்ளனைப்போல் விழித்து, விழித்துப் பார்த்தாராம்!

நான் புஸ்தகத்தின் சில ஏடுகளைக் கிழித்துக் கொண்டு விட்டதாக என் நண்பர் என் மீது குற்றம் சாட்டியதைப் பற்றிக்கூட நான் கவலைப்படவில்லை. ஆனால் அந்தப் புஸ்தகத்தில், அதுவும் அவர் சுவாரஸ்யம் என்று கருதின ஒரு பகுதியைக் கிழித்துக் கொண்டு விட்டேன் என்று அவர் என்மீது குற்றம் சாட்டியதுதான் எனக்கு வெகு வருத்தமாக இருந்ததுடன், வெட்கமாகவும் இருந்தது.

இந்த மர்மத்தை எப்படியாவது நானாகவே கண்டு பிடிப்பது என்று மண்டையை உடைத்துக் கொண்டேன். மண்டை உடைபட்டதுதான் மிச்சமேயொழிய, மர்மம் துலங்கவில்லை.

இப்படி இருக்கையில் திடீரென்று இன்னொரு ஆபத்து நேர்ந்தது.

சுவாரஸ்யமான நாவல் ஒன்று வாசித்துக் கொண்டிருந்தேன். அதில் கதாநாயகன் அநேக திருடர்களை விரட்டியடித்துவிட்டுப் புகழ் மாலையுடன் திரும்பி வரும் கட்டம்.

ஒரு பத்துப் பக்கங்கள் கதாநாயகன் தான் திருடர்களை விரட்டியடித்த சாமர்த்தியத்தைப் பற்றிக் கதாநாயகியிடம் சொல்லிப் பெருமையடித்துக் கொள்கிறான். ஒரு பக்கத்தின் கடைசி வரியில் கதாநாயகி, "உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்" என்று கதாநாயகனைப் புகழ்கிறான்.

ஆனால் அடுத்த பக்கத்தின் முதல் வரியில் "உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்" என்று திருடர் தலைவனின் மனைவி தன் புருஷனைப் புகழ்ந்து கொண்டிருக்கிறாள். என்னடா விஷயம் புரியவில்லை என்று மேலே படித்தால் கதாநாயகன் திருடர்களிடம் சிக்கிக்கொண்டு விட்டான் என்று தெரிகிறது.

முதல் பக்கக் கடைசி வரியில் தன் மனைவியோடு பேசிக்கொண்டிருந்த கதாநாயகன் அடுத்த பக்கத்து முதல் வரியில் எப்படித் திருடர்களிடம் அகப்பட்டுக் கொண்டான் என்று நான் திகைத்துப் பக்க எண்ணிக்கையைப் பார்த்தேன். பார்த்தால் 101 வது பக்கத்திலிருந்து 110 பக்கம் வரை புஸ்தகத்தில் காணவில்லை. நடுவில் யாரோ மாயமாகப் பத்துப் பக்கங்களைக் கிழித்துக் கொண்டுபோய் இருக்கிறார்கள்!

சதிபதிகளைப் பற்றிய புஸ்தகத்தில் 'சுவாரஸ்யமான' பகுதியைத் திருடிக் கொண்டு

போன அதே கள்ளன்தான், இப்பகுதியை யும் திருடியிருக்க வேண்டும் என்று நிர்மா னித்தேன்.

இதற்குப் பிறகு இப்புஸ்தகக் கள்ளன் காரியங்கள் ஒன்றுக்கு மேல் ஒன்று அதி கரித்துக்கொண்டு வந்தன.

என் தங்கை பாரு தன் பள்ளிக்கூட சிநேகிதி எழுதிய பேத்தல் கதை ஒன்றைக் கொடுத்து அபிப்பிராயம் சொல்லும்படி கேட்டிருந்தாள். அந்தக் கதையா, துளிக் கூடப் படிக்கச் சகிக்கவில்லை. சில இடங் களில் காதலனும், காதலியும் நடந்து கொள்ளும் விதம் சற்று அசட்டுப் பிசட்டு என்றுகூட இருந்தது. காரியாலயம் போய் விட்டுச் சாயந்திரம் வீடு திரும்பி வந்தால், அந்தக் கதையை அந்தக் கள்ளன் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டிருந்தான். "அடே! இக்கதையைப் பற்றி நமக்கு ஏற் பட்ட அபிப்பிராயம் அந்தக் கள்ளனுக்கும் ஏற்பட்டிருக்கிறதே!" என்று வெகு சந்தோஷப்பட்டேன்.

நண்பர் கொடுத்த புஸ்தகத்திலிருந்து 'சுவாரஸ்யமான' பகுதியைக் கிழித்ததையும், மனைவியிடம் பெருமையாகப் பேசிக்கொண் டிருந்த கதாநாயகனை அடுத்த கணமே கள் வர் தலைவனிடம் சிக்கவைத்ததைப் பற்றியும் கூட நான் அப்புஸ்தகக் கள்வனை மன்னிக் கத் தயாராய் இருந்தேன்.

கதை விஷயத்தில் மட்டும் இன்றி அரசி யல் விஷயமாகவும் அப் புஸ்தகக் கள்வன் நல்ல அழுத்தமான அபிப்பிராயம் கொண் டிருந்தான் என்று அடுத்த நாள் புலப்பட் டது. ராஜாஜியின் அரசியல் போக்கைக் கண்டித்து ஒரு பத்திரிகை தனக்கு வழக்க மாக உள்ள வெகு கேவலமான நடையில் எழுதியிருந்தது. கொஞ்ச காலமாக ராஜாஜி சொன்னதுதான் சரி என்று நிரூபிக்கப் பட்டு வருகிறதே என்று அதற்கு ஆத்திரம்!

ஆகவே அப் பத்திரிகையை அத் திருடன் சுக்கு நூறாகக் கிழித்து வைத்திருந்ததைப் பார்த்தபோது நான் கொண்ட சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல.

ஆனால் அந்த அயோக்கியப் பயல் அடுத்த நாள் என்னையே அவமானப்படுத்தத் துணிந்து விட்டான். இதுவரையில் நான் இத்தனை அழகாக எழுதியதுமில்லை, இனி மேல் எழுதப் போவதுமில்லை என்று நான் கருதியிருந்த ஒரு கட்டுரையைக் கிழித்து வைத்திருந்தான். அதைப் பார்த்ததும் எனக்குண்டான கோபம் கொஞ்ச நஞ்ச மல்ல. அந்தப் பயலை எப்படியும் கையும் களவுமாகப் பிடித்து விடுவது என்று நிர் மானித்தேன்.

நேற்று காரியாலயத்துக்குப் போய் விட்டு மத்தியானம் இரண்டு மணிக்கு வீடு திரும்பினேன். சாரு கையில் ஒரு நாவலை வைத்துக் கொண்டு சிம்மாசனமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். என் படிக்கும் அறையில் ஏதோ அரவம் கேட்கவே திருடன் அகப் பட்டுக் கொண்டு விட்டான் என்று அடிமே லடி வைத்து உள்ளே எட்டிப் பார்த்தேன். திருடன் வழக்கம் போல் தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான். திருடனைப் பார்த்து, "அட கழுதை, நீயா!" என் றேன். வெகு சுவாரஸ்யமாக நான் எழுதிய புஸ்தகம் ஒன்றைக் கிழித்துக்கொண்டிருந்த ஒன்பது மாதக் குழந்தை அனு என்னைப் பார்த்து, தன் பொக்கை வாயைத் திறந்து கலகலவென்று சிரித்தாள்.

புஸ்தகக் கள்ளன் வேறு யாரும் இல்லை, அனு கழுதைதான் என்று அப்பொழுது தான் தெரிந்து கொண்டேன். தனக்குத் தவழத் தெரிந்து விட்ட அற்புதத்தைக் கொண்டாடுவதற்காக அவள் இப்படிப் புஸ்தகங்களைக் கிழிக்க ஆரம்பித்து விட் டாள்! பலே கைகாரி!





மகாத்மா காந்தி ஒரு சமயம் ஒரு சோம்பேறிக் கிழவரைப் பார்க்க நேர்ந்தது. காந்திஜி அவரைப் பார்த்து, "ஏன் இப்படி ஒரு வேலை யும் செய்யாமல் சோம்பேறியாக இருக்கிறீர்?" என்று கேட்டார். அதற்கு அந்தக் கிழவர் தமக்கு வயதாகிவிட்டது, அதனால்தான் ஒரு வேலையும் செய்யவில்லை என்று தெரிவிப்பதற்காக, தம் பொக்கை வாயைத் திறந்து காண்பித்தார். உடனே காந்திஜி பதிலுக்குத் தம் பொக்கை வாயைத் திறந்து காண்பித்தார். பக்கத்தி லிருந்தவர்கள் எல்லோரும் கொல்லென்று நகைத்தனர்.

# பீல்டு மார்ஷல் மாக் ஆர்தர்

**பி**லிப்பைன் தீவுகளை ஜப்பானியர் திடீரென்று தாக்கியதும் அங்கிருந்த அமெரிக்கத் துருப்புகள் அதைவிட்டு வெளியேற நேர்ந்த தல்லவா? அப்பொழுது அத்துருப்புகளைச் சேர்ந்த ஒரே ஒரு மனிதர் மட்டும், "நான் இன்று இத்தீவை விட்டுச் செல்லுகிறேன். ஆனால் சீக்கிரம் கட்டாயம் திரும்பி வருவேன். வந்துதான் தீருவேன்" என்று சபதம் கூறினர். கடைசியில் அந்தச் சபதத்தை நிறைவேற்றியே விட்டார். அம்மாதிரி தாம் சொன்ன வாக்கைக் காப்பாற்றிய தீர புருஷன்தான் பிலிப்பைன் சேனாதிபதியான பீல்டு மார்ஷல் மாக் ஆர்தர்.



பிலிப்பைன் தீவுகளை விட்டு வெளியேறியதும் பீல்ட் மார்ஷல் மாக் ஆர்தர் ஆஸ்திரேலியாவில் தம் காரியாலயத்தை அமைத்துக் கொண்டார். இவர் காரியாலயத்திலேயே 35 யுத்த நிருபர்கள் இருந்தார்கள். இருந்தும் இவர் என்ன பண்ணிக் கொண்டிருந்தார் என்று மட்டும் யாருக்கும் தெரியாது! அத்தனை ரகசியமாகப் படையெடுப்பு ஏற்பாடுகளை நடத்திக் கொண்டிருந்தார்!

இன்று பசிபிக் யுத்த அரங்கத்தில் நேச நாட்டினர் தலை நிமிர்ந்து நிற்பதற்கும் வெற்றிக்குமேல் வெற்றி அடைந்து கொண்டிருப்பதற்கும், ஆஸ்ட்ரேலியா எதிரி பயமில்லாமல் இருப்பதற்கும் மாக் ஆர்தர்தான் காரணம். அமெரிக்கத் தேர்தலில் இவரும் போட்டி போடப் போவதாகக் கொஞ்ச நாள் இவர் பெயர் அடிபட்டது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

[மார்ச் 18உ இதழில் நாம் வான் ரூன்ஸ்டெட் படத்தைப் போட்டு, "ஜெர்மன் தளபதிகளில் ரூன்ஸ்டெட்டுக்குத்தான் இதுவரை கேடு ஒன்றும் நேரவில்லை" என்று எழுதியிருந்தோம். உடனே, 'வி' தண்டு போட்டது போல், ரூன்ஸ்டெட்டுக்குக் கேடு வந்துவிட்டது! இவ்விதம் நேசக் கட்சிக்கு நாம் செய்த பெரிய உதவிக்கு, மாக் ஆர்தரைப் போட்டதினால் பரிகாரம் நேராமல் இருக்கவேண்டும். அதாவது ஜப்பான் யுத்தம் வெற்றியுடன் முடியும் வரையில் தளபதி மாக் ஆர்தருக்கு ஒன்றும் நேராமல் இருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.]

★ ★ ★

# இதுவே கடைசித் தடவை



*பிலிப்ஸ் புரூக்ஸ் என்பவர் ஒரு பிரபல அமெரிக்கப் பாதிரியார். ஒரு முறை அவர் கடுமையான நோய்வாய்ப்பட்டு, கொஞ்சங் கொஞ்சமாகக் குணமாகி வந்தார். உடல் நிலைமை காரணமாக அவரைப் பார்க்க எவரும் அனுமதிக்கப்படவில்லை. ஆனால், இங்கர்ஸால் என்ற பெயர் பெற்ற நாஸ்திகர் அவரைப் பார்க்க விரும்பிய போது, பாதிரியார் சந்தோஷமாக ஒப்புக் கொண்டார்.*

*இருவரும் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். இங்கர்ஸால் கடைசியில் பாதிரியாரைப் பார்த்து, "எத்தனையோ பேர் உங்களைப் பார்க்க வந்தார்கள். நீங்கள் யாரையும் பார்க்க மறுத்துவிட்டீர்கள். நான் தங்களைப் பார்க்க விரும்பியதும் உடனே ஒப்புக் கொண்டீர்களே, காரணம் என்ன?" என்று கேட்டார்.*

*"காரணமா? வேறு ஒன்றும் இல்லை. நண்பர்களையும் உறவினர்களையும் மறு உலகத்தில் பார்க்க முடியும் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால் நாஸ்திகராகிய உம்மை நான் பார்ப்பது இதுவே கடைசித் தடவையாய் இருக்கலாம்!" என்றார் பாதிரியார்.*






வினோலியா உபயோகித்து ஸ்நானம் செய்தால் குளிர்ச்சி உண்டாகும் போது நீங்கள் ஏன் வெப்பத்தினால் கஷ்டப்பட வேண்டும். இந்த சோப்பின் வெண்ணிறம் வாய்ந்த நுரை உங்களை சுத்தமாக்கும் பொழுது ஏன் வியர்வையுடன் இருக்கவேண்டும். வினோலியா சோப்பின் வாசனை களைப்பையும், உத்ஸாகத்தையும் உண்டுபண்ணி, மனதிற்கு சுகத்தையும் அளிக்கிறது.

**வினோலியா**
**ஒயிட் ரோஸ் ஸோப்பு**




VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND




## நல்ல உயர்ந்த பண்டங்களையே விரும்புவோருக்கு

நமக்குக் கட்டாவிடினும் நம்மில் எல்லோரும் மேன்மையான பண்டங்களையே விரும்புகிறோம். சிகரெட்டில் சிறந்த புகையிலையை உபயோகித்தால்தான் அது விரும்பிப் பலராலும் சிறந்ததென்று சொல்லப்படும். டிலக்ஸ் டெனுர் சிகரெட் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. பலரும் வாங்கி ஆனந்தமாக அனுபவிக்கலாம். உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலைகளாலேதான் டிலக்ஸ் டெனுர் சிகரெட்டுகள் செய்யப்படுகின்றன.

டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

# tenor

is truly a
de Luxe Cigarette

JAMES CARLTON LTD, LONDON.

# லைப்பாய்
## பழக்கத்தையும் அவன் அறிந்திருக்கிறான்



அவன் ஸ்கூலுக்குப் போகிறான். அங்கிருந்து என்ன கொண்டு வருவான்? புதிய அறிவு, புதிய முறைகள்—சில தொத்து வியாதிக் கிருமிகளுங்கூட! அவனுக்குக் கற்றுக் கொடுத்த எல்லாப் பாதுகாப்புகளுடனும் தாயார் தன் மகனை அனுப்புகிறாள். ஆரோக்கியமுள்ள சிறுவனையும் பிடிக்கக் கூடிய அழுக்கு அபாயத்திலிருந்து காப்பாற்ற லைப்பாய் சோப்பைத் தினசரி உபயோகிப்பதே அவற்றுள் முக்கியமானது.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.**

**அது ஒரு நல்ல பழக்கம்.**

# சிறுவர்களுக்கு கொடுக்கும் ஒவ்வொரு பதார்த்தங்களையும் அதிக ஊக்கமளிக்கக்கூடியவைகளாகச் செய்யுங்கள்!






ஒவ்வொருஸ்திரீயும் எந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்கவேண்டும். டால்டா "குக்-புக்" (ஆங்கிலத்தில் மட்டும்) உணவும் பொருள்களின் தாரதாரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. Dept. E138 P.O. Box No.353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

சிறுவர்களுக்குச் சாப்பாடு தயாரிக்குமுன் அதிக சக்தியையளிக்கக்கூடிய உணவு தேவையென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். உணவுகள் பலத்தைக்கொடுக்கக்கூடிய அளவில் வித்தியாசப்பட்டிருப்பதால், சிறுவர்கள் அவ்வப்போது சாப்பிட்டாலும், அவர்களுக்குப் போதிய அளவிற்கு வேண்டிய ஊக்கம் கிடைப்பதில்லை. ஒவ்வொரு விதமான உணவையும் அதிக ஊக்கமளிக்கக்கூடியவையாகச் செய்யலாம் — வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்யுங்கள். குடும்பச்சாப்பாடு டால்டாவினால் சமையல் செய்தால் சக்தி குறைவிற்கு பயமே கிடையாது — ஏனென்றால் இந்த உயர்ந்த சமையல் பதார்த்தத்தில் இயற்கையின் பலத்தைக்கொடுக்கக்கூடிய முக்கிய ஆகார சத்துக்களிருக்கின்றன. உணவைச் சாப்பிடுவதற்கு டால்டா தனி ருசியைக்கொடுக்கிறது — மேலும் அது தாவரப் பொருள்தான்.

**வைடமின் நிறைந்த டால்டா ஊக்கமளிக்கிறது.**

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

## 1944-ம் வருஷத்தின் உன்னத சமூகப் படம்






3-வது வாரம்

சிராளா - கோபாலகிருஷ்ண
பலகோல் - ஹுமாயூன்

2-வது வாரம்

கன்னிக்கோட்டை
காரனேஷன்
வாரங்கல் பிரபாகர்

| | | | | |
|---|---|---|---|---|
| சிகுந்திராபாத் | ... | ராஜேஸ்வரி | 29உ | முதல் |
| திருச்சி | .... | கெயிட்டி | 30உ | முதல் |
| கும்பகோணம் | ... | விஜயலக்ஷிமி | 30உ | முதல் |
| ஆலந்தூர் | ... | விக்டோரியா | 30உ | முதல் |
| மதுரை | ... | கோபாலகிருஷ்ண | 6-4-45 | முதல் |
| ஆலப்புழை | ... | கிருஷ்ண | 12-4-45 | முதல் |

**நாஸ்**
....ரிலீஸ்....

# ஒவ்வொருவருக்கும் உகந்த ஒரு




சாவி மார்க்

# கோத்ரெஜ் ஸ்நாந சோப்

எல்லோரும் கோத்ரெஜ் ஸ்நாந சோப்புகளை விரும்புவதற்கு காரணம் அவை பல் வேறு ரகங்களில் கிடைப்பதுதான். இயற்கையின் சிங்காரப் பொருட்களான, நன்மை அளிக்கும் தூய, தாவர எண்ணெய்களிலிருந்தும், மூலிகைகளிலிருந்தும் மாத்திரமே செய்யப்பட்ட இந்த சிறந்த ஸ்நாந சோப்புகள், 25 வருட காலமாக, நம் நாட்டின் பரம்பரை சொத்துகளான மேனி அழகையும், தூய்மையையும் பாதுகாத்து வர உதவியிருக்கின்றன. தாவர எண்ணெய்களிலிருந்து மாத்திரம் சோப் செய்யும் முறையில் நாங்கள்தான் வழிகாட்டிகள்; மேலும், சிறந்த ஸ்நாந சோப்புகள் மிருகக் கொழுப்பிலிருந்தல்லாது, தேர்ந்தெடுக்கப்பட்ட தாவர எண்ணெய்களிலிருந்து மாத்திரம் தான் செய்ய வேண்டுமென்பதையும் முதலில் உணர்ந்தவர்கள். இந்திய மூலதனம் கொண்டு, இந்தியர்கள் நிர்வகிக்கும் தொழிற் சாலையில், இந்திய தொழிலாளர்களால் செய்யப்பட்ட இந்த சுதேசி சோப்புகள், நம் நாட்டிலும் வெளி நாடுகளிலும் புகழடைந்திருப்பதும், வெளி நாட்டு சோப்புகளைவிட குணத்திலும், ஆதாயத்திலும் சிறந்திருப்பதும், நமக்கு கௌரவமளிக்கிறது. எங்கும், எப்பொழுதும் செய்யப்பட்டுள்ள ஸ்நாந சோப்புகளில் சர்வோத்தமமான இந்த சோப்புகளினின்றும், உங்களுக்குகந்ததை தேர்ந்தெடுத்து, உண்மை இந்தியரைப்போல் மேனியை தூய்மையாகவும் பரிமளமாகவும் வைத்திருங்கள்.



ந. 1 ந. 2



'வத்னி'



டர்கிஷ் பாத் பாமொலி



ஸாண்டல் லிம்டா கஸ்



ஷேவிங் ரவுண்டும் ஸ்டிக்கும்

கோத்ரெஜ் சோப்ஸ், லிட். — மதராஸ் (164, பிராட்வே); கோயமுத்தூர் (3, நாயக் தெரு)

# தேசிய திருமணம்



நீலா    ராஜு

கொழும்பு "காந்தி கழகம்" கௌரவ இணைக் காரியதரிசியும், அகில இலங்கை தமிழ்க் காங்கிரஸ் கமிட்டி, காரியக் கமிட்டி அங்கத்தவருமான ஸ்ரீ ராஜுவுக்கும் ராமனாதபுரம் ஜில்லா, திருப்பத்தூர் திரு. கு ராமானுஜம் நாயுடு அவர்களின் புதல்வி, சௌ. நீலாவுக்கும் சென்ற 4-2-45-ல் கருகப்பிலான்பட்டியில் மணமகன் இல்லத்தில் திருமணம் வெகு சிறப்புடன் நடந்தேறியது. திருமணத்தின் போது பல பாகங்களிலிருந்து காங்கிரஸ் வாதிகளும், நண்பர்களும், பந்துக்களும் விஜயஞ் செய்திருந்தனர். இலங்கையிலிருந்து ஆசித் தந்திகளும், கடிதங்களும் வந்தவண்ணமாக இருந்தன. அன்று காலை 10-மணிக்கு திருமணப் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. எளியவர்களுக்கு அன்னதானம், ஆடை தானம் அளிக்கப்பட்டது. கிராமாந்திரத்திலே இத்தகைய முறையில் தேசிய திருமணம் எங்குமே நடந்ததில்லை.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press. 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.